# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

66-3

# மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு மாண்புமிகு அமைச்சர் ஆர். எம். வீரப்பன் வருகை



ஆட்சியாளர் கொடுத்த நூலைப் பார்வையிடுதல்



பார்வையாளர் ஏட்டில் தமது பாராட்டுரையினை எழுதுதல்

தமிழக, சுற்றுலாத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் 11-2-78 அன்று சென்னை, மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு வருகை தந்தார். நூல் நிலையத்தின் பல பகுதிகளையும் அவர் ஆர்வத்துடன் பார்வையிட்டார். கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களும், பொது மேலாளர் திரு. இரா. கலியாண சுந்தரம் அவர்களும் அமைச்சரை வரவேற்று நூலகத்தைச் சுற்றிக் காட்டினர். நூலகத்தில் கிடைத்தற்கரிய நூல்கள் தொகுத்து வைக்கப்பெற்றிருப்பதையும் அதை இந்திய நாட்டிலுள்ள பல பல்கலைக்கழகங்களிலுள்ள ஆய்வாளர்கள் பயன்படுத்துவதையும் கண்டு அமைச்சர் பாராட்டினார். அவர் நூலகப் பார்வையாளர் ஏட்டில் பொதிந்த பாராட்டுரை :

"தமிழ்த் தொண்டர், பெரியவர் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் அன்பால், இன்று தனித்தமிழ் கண்ட மறைமலை அடிகளார் பெயரில் உள்ள நூல்நிலையத்தைக் கண்டேன். தமிழின் பெருமையை, சிறப்பை, உணரவும், தமிழை வளர்க்க உணர்வு பெறவும், இந்த நூல்நிலையம் உறுதுணையாக அமைந்துள்ளது. நூல்நிலையம் என்று சொல்வதைவிட, தமிழ்மொழியின் கருவூலம் என்று கருதத்தக்க வகையில், ஆயிரமாயிரம் நூல்கள்—ஆராய்ச்சிக்குப் பயன்படும் இலக்கியங்கள்-இந்த நூல்நிலையத்தை, வளர்க்கவும், பாதுகாக்கவும், தமிழ்மக்கள் எல்லோரும் கடமைப்பட்டிருக்கிறோம்.

## மாண்புமிகு அமைச்சரவர்களிடம் கழக ஆட்சியாளர் எடுத்துரைத்தது

1958இல் இந்த நூல்நிலையம் தொடங்கப்பெற்ற காலமுதல் மத்திய அரசிடமிருந்து ரூ. 31,000 மட்டுமே உதவி பெற்றுள்ளது. 1975—76, 1976—1977க்குத் தமிழக அரசு ஆண்டு ஒன்றுக்கு ரூ.10,000 மானியமாக வழங்கி வருகின்றது. அத் தொகையினை உயர்த்தி வழங்கும்படி விண்ணப்பம் அனுப்பப்பட்டிருக்கிறது.

1921இல் நெல்லையில் தொடங்கப் பெற்ற சிவஞான முனிவர் நூல் நிலையமும் 1961இல் பல்லாவரத்தில், மறைமலையடிகளார் வாழ்ந்த மாளிகையை மத்திய அரசு, தமிழக அரசு பொருளுதவி கொண்டு வாங்கி அதனைக் கலைமன்றமாக்கிச் சீரோடும் சிறப்போடும் கழகச் செலவிலேயே நடத்தி வருகின்றது. அதனையும் பார்வையிட்டு, வேண்டும் உதவிகளைச் செய்யும்படி அமைச்சரவர்களிடம் ஆட்சியாளர் பணிவன்போடு வேண்டிக் கொண்டனர்.

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ00௯, மாசி | பரல் |
| --- | --- | --- |
| ௫உ | மார்ச்சு 1978 | எ |

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம்

ஒருநாட்டு மக்கள் முன்னேறும் வழியும், அவர்தம் நாகரிகத்தைக் காட்டும் மானியும் (meter) அவர்களுடைய மொழியே. ஒரு மொழியின் வளர்ச்சியையும் இலக்கியச் சிறப்பையும் சொல்வளத்தையும் காட்டுவது அம் மொழியில் விளங்கும் அகர முதலியேயாம்.

வளர்ந்து வளம்பட்டுவரும் பற்பல மொழிகளிலும் விரிவும் விளக்கமும் வாய்ந்த அகரமுதலிகள் உருவாக்கப் படுகின்றன. காலந்தோறும், துறைதோறும் பல்வேறு வடிவங்களில் வெளியிடப்படுகின்றன. சொற்பொருள் அகரவரிசைகள் முதல் கலைக்களஞ்சியம் ஈறான பலவும் அகரமுதலிகளே.

நம் அருமைத் தாய்மொழியாகிய தமிழோ ஆரியர் தென்னாடு போந்ததிலிருந்து கடந்த மூவாயிரம் ஆண்டாகப் பல்வேறு வகையிற் சிதைக்கப்பட்டுள்ளது. தமிழ் மொழியும், தமிழ் இலக்கியங்களும், உலகில் முதன் முதலாகத் தோன்றி யிருந்தும் அவை மேற்கூறியாங்கு அழிக்கப்பட்டும், குறைக்கப் பட்டும், மறைக்கப்பட்டும் போயின. தமிழர் அறிவிலிகளும் அடிமைகளு மாயினர். தமிழ் திருக்கோயில் வழிபாட்டு மொழி யாகாதென இழிக்கவும், விலக்கவும் படுவதாயிற்று.

ஆங்கில நன்மக்களால் ஏற்பட்ட செங்கோலாட்சியாலும், சிறந்த கல்வியாலும் தமிழர்க்கு விழிப்புண்டாகி முன்னேறத் தொடங்கியுள்ளனர். இறக்குந் தறுவாயிலிருந்த கடைக்கழக இலக்கியத்தில் ஒரு பகுதியேனும் கண்டெடுக்கப்பட்டுத் தமிழர்க்கு ஊன்றுகோலாயிற்று.

நயன்மைக் கட்சித் (Justice Party) தலைவர்களால் அரசியல் துறையில் ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டதெனினும், அவர் களுள் தமிழறிஞர் ஒருவரும் இன்மையால் மொழித் துறை யிலும், இலக்கியத் துறையிலும், கடுகளவு முன்னேற்றமும் இல்லாது போயிற்று. அதனால் தமிழ்ப் பகைவரும் அடிமை களும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலி வாயிலாக இயன்றவரை தமிழைக் கெடுத்துவிட்டனர். அடிப்படைத் தமிழ்ச் சொற்களை யெல்லாம் வடசொல்லாகக் குறித்துத் தமிழ் வடமொழியின் கிளையென்று அயலார் கருதுமாறு செய்ததுடன் அதைப் பன்மொழிக் கலவை யென்றும் காட்டிவிட்டனர். அதனால் மேலையர் பார்வையில் தமிழின் மதிப்பு மிகமிகக் கெட்டுவிட்டது; தமிழ், தமிழர் முன்னேற்றம் பெரிதுந் தடைப் பட்டுள்ளது.

அகர முதலிகளுள் ஒருவகை சொற்பிறப்பியல் அகரமுதலி. மேலை மொழிகள் பலவற்றிற்கு, சிறப்பாக ஆங்கிலத்திற்குச் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் ஒன்றும் பலவும் தோன்றி யுள்ளன. ஆயினும் அவை உண்மையான சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அல்ல. ஏனெனின் மேலை அல்லது ஐரோப்பிய மொழிகள் திரிமொழிகள் ஆதலின் அவற்றின் வேர்ச்சொற் களைக் காணப் போதிய நிலைமை இல்லை. சொற்பிறப்பியல் அகர முதலிகள் என்பனவெல்லாம் உண்மையில் ஒப்பியல் அகர முதலிகளே. ஒரோவொரு சொல்லுக்கு வேர் காட்டப் பட்டிருப்பினும் அதுவும் திரிசொல்லே; அடிவேரன்று.

இயன்மொழியாய் இருப்பதுடன் மொழி தோன்றிய வகையைக் காட்டக்கூடிய வேர்ச்சொற்களை யெல்லாம் இன்று காறும் தாங்கி நிற்கின்றமையான் உண்மையான சொற்பிறப் பியல் அகரமுதலி தொகுக்க இடந் தருவது தமிழ் ஒன்றுமே யாம். 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே'* என்று தமிழுக்குச் சொல்வதுபோல் வேறு எம்மொழிக்கும் சொல்ல வியலாது.

தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலி இதுகாறும் தோன் றாமையானும், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலியில் ஆயிரக்கணக்கான சொற்கள் விடுபட்டுள்ளமையானும், நூற்றுக்கணக்கான சொற்களுக்குத் தவறான பொருள் குறிக்கப் பட்டிருக்கின்றமையானும், அடிப்படைத் தமிழ்ச் சொற்களை யெல்லாம் வடசொல்லென்று காட்டியிருக்கின்றமையானும் இக் குறைகளை யெல்லாம் ஒருங்கே நீக்கும் செந்தமிழ்ச் சொற்பிறப்

* தொல்-640.

பியல் அகரமுதலி யொன்று தொகுப்பது இன்றியமையாத தாயிற்று.

இனிச், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத் தற்கு, ஆசிரியர் தவத்திரு மறைமலையடிகளார் அவர்களால் பெரிதும் பாராட்டப்பெற்றவரும், தமிழ்மொழி, இலக்கண இலக்கியப் பரப்பின் நிலைகண்டுணர்ந்தவரும், பன்மொழி ஆராய்ச்சியாளரும், பல்துறை அறிஞரும், மொழியியல் துறை யில் தம் அஃகியகன்ற நுண்ணிய பேரறிவினால் கடந்த அரை நூற்றாண்டுக் காலமாக ஆழ்ந்தாராய்ந்து நடுவுநிலை பிறழாது முடிபுகண்டுரைக்கும் மூதறிஞருமான திருமிகு தேவநேயப் பாவாணர் அவர்களே முழுமையான தகுதி வாய்ந்தவர் என்பது ஒருதலை. பன்னூல் ஆசிரியரான பாவாணர் அவர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பே தம் வாழ் நாள் பெருநோக்கமாகக் கொண்டிருக்கின்றார்கள்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் இன்றி யமையாமையையும், அப் பெரும்பணிக்குப் பாவாணர் அவர் களே தக்கார் என்பதையும் பற்பலரும் பலபடியாய் உணர்த்த உணர்ந்தமேனாள் தமிழ்நாட்டரசு 1974 ஆம் ஆண்டு மே மாதம் 8 ஆம் பக்கல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தை நிறுவிப், பாவாணர் அவர்களை இயக்குநராக அமர்த்திற்று.

அகர முதலியின், அதிலுஞ் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் பரப்பையும் சிறப்பையும் முழுமையாக அறியாமையால் அரசு போதிய தொகையை ஒதுக்காததுடன் தொகுப்புக் காலத்தையும் நாலாண்டாக மிகமிகச் சுருக்கி விட்டது.

ஒரு நிறைவான அகரமுதலிக்கு வேண்டுங் காலத்தையும் தொகையையுங் கீழ்க்காணும் பிறமொழி அகரமுதலித் திட்டங் களினின்று உணர்ந்து கொள்ளலாம்.

1. ஆக்சுபோர்டு ஆங்கிலப் பேரகரமுதலி

இவ் வகர முதலியின் வேலை 1858 ஆம் ஆண்டு சனவரி மாதம் 7 ஆம் பக்கல் தொடங்கிற்று. 1929 ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 19 ஆம் பக்கல் முடிவுற்றது. ஆகவே 70 ஆண்டுகள் ஆயின.

நான்கு பதிப்பாசிரியத் தலைமையின்கீழ் நானூற்றுவர் நிலையாகவிருந்து பணி செய்தனர்.

தொகுக்கப்பட்ட சொற்கள் 414, 825. தரப்பட்ட பொருள் வரம்பறைகள் (Definitions) 500, 000. எடுத்தாளப்பட்ட மேற்கோள்கள் 18,27,304.

சென்ற செலவு 30,50,00 பவுண்.

2. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலி

இவ் வகர முதலிக்கு 1905 ஆம் ஆண்டு முயற்சி தொடங்கப்பட்டது. 1913 ஆம் ஆண்டு சனவரி மாதம் பணி தொடங்கிற்று. 1936 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 20 ஆம் பக்கல் அகரமுதலி முடிந்தது. பிற்சேர்ப்பு 1939 ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 31ஆம் பக்கல் முடிந்தது. ஆகமொத்தம் 26ஆண்டுகள் ஆயின.

நிலையாக இருந்து பணிசெய்தவர் அறுவர். இடையிடைக் குறுங்காலிகமாக அமர்த்தப்பெற்ற துணைவர் இருவர் அல்லது மூவர்.

தொகுக்கப்பட்ட சொற்கள் 1,04,405 + 13 357 = 1,17,762. இவற்றுட் பல தமிழுக்கு முற்றும் வேண்டாதன.

சென்ற செலவு உருவா 4,10,000 + 3¾ ஆண்டுத் தமிழ்த் துறைப் பணியாளர் சம்பளம்.

3. சமற்கிருத அகர முதலி

இவ் வகர முதலியின் வேலை 1948 ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. 28 ஆண்டுகட்குப்பின் 1976 ஆம் ஆண்டு முதன் மடலத்து முதற்பகுதி 216 பக்க அளவிலும், 1977 இல் முதன் மடலத்து இரண்டாம் பகுதி 288 (217—504) பக்க அளவிலும் வெளிவந்துள்ளன.

1990 இல் முடியலாம்; அல்லது மேலுஞ் செல்லலாம்.

பதிப்பாண்மைப் பணியாளர் 22 பேர்.

தொகுப்புச் செலவு தெரியவில்லை.

பதிப்புச் செலவுத் தொகையாக இந்திய அரசு உருவா ஒருகோடி வழங்கியுள்ளது. ப. ந. கு. (U.G.C.), மராத்திய நாட்டு அரசு, பூனாப் பல்கலைக்கழகம் ஆகியவை பெருந்தொகை வழங்கியுள்ளன. ஒன்றிய நாட்டினங்கள் கல்வியறிவுப் பண்பாட்டுக் கழகம் அச்சீடு முடியும் வரை ஆண்டுதோறும் பெருந்தொகை வழங்குகின்றது. பாரிசுச் சமற்கிருதக் கழகம் உருவா 2 கோடிக்கு மேலும் வழங்கியுள்ளது.

4. மலையாள அகரமுதலி

இவ் வகர முதலியின் வேலை 1953 சூலையில் தொடங்கப் பட்டது. 12 ஆண்டுகட்குப்பின் முதன்மடலம் ('அ') 1965 ஆம் ஆண்டிலும், இரண்டாம் மடலம் ('ஆ—ஔ') 1970 ஆம் ஆண்டிலும், மூன்றும் மடலம் ('க—கீ') 1976 ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளன. இன்னும் குறைந்தது 4 மடலங்கள் வெளி வரல் வேண்டும்.

20 ஆண்டிற்குமேற் செல்லும்.

நிலையாக 36 பேர் பணியாற்றுகின்றனர்,

தொடக்கத்தில் திருவாங்கூர் அரசும், பல்கலைக் கழகமும் செலவைப் பகிர்ந்து கொண்டன. ப. ந. கு. 1954இல் இருந்து ஆண்டுதோறும் உருவா 20,000 அளித்து வந்தது. சென்னை அரசு தொடக்க நிலையில் உருவா 5,000 வழங்கியது. ப. ந. கு. திருவாங்கூர் பல்கலைக்கழகம் கேரளாப் பல்கலைக் கழகமாக மாற்றப்பட்டபின் 1960 முதல் ஆண்டுதோறும் பணியாளர் சம்பளத்தில் 50%ம், தொடராச் செலவில் (Non recurring Item of expenditure) 66%ம் வழங்கி வருகின்றது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம் 1974 ஆம் ஆண்டு மே மாதம் 8 ஆம் பக்கல் நான்காண்டுத் திட்டமாக நிறுவப்பட்டது.

ஒதுக்கப்பட்ட தொகை 2 இலக்கம் மட்டுமே.

மேனாள் குதிரைக் கொட்டிலான ஒரு பழங்கட்டிடம் அலுவலகக் கூடமாக ஒதுக்கப்பட்டுள்ளது. அதுவும் மழையில் ஒழுகலுடையதாகும்.

உருவா 1200க்கு மட்டுமே நூல்கள் வாங்கப்பட்டுள்ளன. இயக்குநர் பாவாணர் அவர்களின் சொந்த நூலகத்திலேயே பணி நடந்து வருகின்றது. இயக்குநருக்குத் துணையாளராகத் திரவிடச் சொற்றொகுப்பாளர் ஒருவரே பணியாற்றி வருகின்றார்.

தகுதியான இடமும், பிற ஏந்து (வசதி) களும் செய்து தருமாறு அரசுக்குப் பன்முறை வேண்டுகோள் விடுத்தும் இது காறும் எவ்வகை நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படவில்லை. இந்நிலையில் பணி எவ்வாறு நடைபெறும் என்பதை எண்ணிப் பாருமின்!

இத்துணை இடர்ப்பாடுகள் இருந்தும் அகர முதலியின் முதன்மடலத்து முதற்பகுதி ('அ') தட்டச்சு வடிவில் 1500 பக்க அளவில் உருவாகி உள்ளதாகவும், அரசு அச்சகத்திற்கு

அனுப்பப்பட்டு ஆங்கு அகர முதலிக்குரிய வேறுபாட்டுக் குறி எழுத்துக்கள் இல்லையென்னும் குறிப்புடன் திருப்பப்பட்டுள்ள தாகவும் அறிகின்றோம்.

இச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி ஏனை அகர முதலிகள் போல்வதன்று. பலவகையில் தனிச்சிறப்புடைய அமைப்பினதாகும். அவையாவன :

1 சொற்களுக்கு வேரும் வரலாறும் கூறப்படல்.

2. தமிழ்ச் சொற்களையும் அயற்சொற்களையும் வேறு வேறாகத் தொகுத்தல்.

3. திரவிட இனச்சொற்களுடன் ஆரிய இனச்சொற் களும் காட்டப்படல்.

4 செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் (Principles of Tamil Etymology) ஒரு துணைமடலமாக வருதல்.

5. இந்திய அகரமுதலிகட்கெல்லாம் வழிகாட்டியாதல்.

உண்மையான தமிழ் வளர்ச்சிக்கும், தமிழர் முன்னேற்றத் திற்கும் அடிப்படையானதும், செய்விப்பார்க்கும் நிலைத்த பெரும் புகழைத் தருவதுமான இவ்வகர முதலித் திட்டத்தில் அரசு நாட்டஞ் செலுத்தாது, நடப்பது நடக்கவென்றிருப்பது பெரிதும் வருந்தத் தக்கதாகும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தைக் குறைந்த பக்கம் மேலும் 10 ஆண்டுக் காலத்திற்கு நீட்டித்தல் வேண்டும்.

நாட்டுப்புறத் தமிழ்ச் சொல்லும் கல்வெட்டுச் சொல்லும், மருத்துவச் சொல்லும் பிறவும் தொகுக்க வேண்டியிருப்பதனா லும், சொற்களுக்குப் பொருளும் வேருடன் கூடிய வரலாறும் எழுதுவதே இயக்குநர் பணியாய் இருத்தல்வேண்டு மாதலினா லும் துணையாளராக மேலும் 4 பேர் அமர்த்தப்பெறல் வேண்டும்.

இயக்குநர் ஆங்காங்குச் சென்று சிற்சில சொற்களைப் பற்றி அறிகுநரையும், முதியோரையும், தொழிலாளரையும் வினவ வேண்டியிருத்தலால் ஓர் இயங்கி (Car) வேண்டும்.

இயக்குநரின் நிலைத்த சம்பளம் உயர்த்தப்படல் அல்லது ஆண்டுக்காண்டு கூடுதல் உள்ள திட்டத்ததாதல் வேண்டும்.

செம்மையான அலுவலகக் கூடமும் போதுமான அள வுக்கு அடிப்படையான நூல்களும் வேண்டும்.

அரசு இத் திட்டத்திற்கு முதன்மையளித்து உரியன வற்றை உடனே செய்து சிறப்புறும் என்று எதிர்பார்க்கின் றோம்.

———

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

7. காலம்

தமிழுக்கு அடிப்படையானதும் இன்றியமையாததுமான சொற்களுள் ஒன்று 'காலம்'. ஆயின், ஆராய்ச்சியில்லாதவர் அனைவரும் நம்புமாறு, இதை வடசொல்லென்று சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகரமுதலி குறிக்கின்றது. ஆயினும்,

"காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்என வருஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வருஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா வுயர்திணை மேன"

என்று தொல்காப்பியங் கூறுகின்றது. (சொல், கிளவி. 58)

இனி, இதுவுஞ் சான்றாகாவாறு,

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே"

என்னுந் தொல்காப்பிய நூற்பாவையே (சொல். எச்ச. 1) ஒருவர் எடுத்துக்காட்டலாம்.

ஆதலால், இதைத் தென்சொல்லேயென்று நாட்டற்குத் தொன்றுதொட்ட ஆட்சியொடு அறிவியன் முறைப்பட்ட வேர்ச்சொல்லாராய்ச்சியும் இன்றியமையாததாகின்றது.

தமிழில், குறுங்காலத்தைக் குறிக்க, அமையம், ஏல்வை, கால், சமையம், செவ்வி, ஞான்று, நேரம், பொழுது, வேளை முதலிய பல சொற்கள் உளளன. ஆயின் நெடுங்காலத்தைக் குறிக்கக் காலம் என்னும் ஒரே சொல உள்ளது. இதற்கு அடிமூலம் கோல் என்பதே; இதன் அடிப்பொருள் திரட்சி என்பதே. உருட்சி, கூடல் என்னும் இரு கருத்தினின்றும் திரட்சிக் கருத்துப் பிறக்கும். இவ்விரு வழியும் கோற்சொல்லிற் கேற்கும்.

குல்—குல—குலவு. குலவுதல் = கூடுதல், வளைதல்.

குல்—கொல்—கோல்=திரட்சி. "கோனிற வளையினர்க்கு" (சீவக. 209).

திரண்ட குச்சையும் ("கோலாடக்குரங்காடும்."), திரண்ட தடியையும் "கோற்கண்ணளாகுங் குனிந்து" (நாலடி. 17), திரண்ட கம்பையும்" (கோல் வலித்தல்=தண்டால் ஓடந் தள்ளுதல்), திரண்ட கழுவையும் ("வேன் மழுக்கடைத்தலைக் கழுக்கோல்"—திருவாலவா. 39 : 19), கோல் என்னுஞ் சொல் குறிக்கும்.

பந்தலைத் தாங்கும் கால்களாகக் கம்புகளான கோல்களையே நடுவர். தூண்போலத் தாங்கியாகும்போது பொருள் மாறுவதால், அம் மாற்றத்தைக் குறிக்கக் கோல் என்பது கால் என்று திரியும் சொல்லாக்கத்தில் ஆகாரம் ஒகாரமாகத் திரிவது பன்மொழிப் பொதுநெறி. எ—டு; ஓட்டம் (ஒப்பு)—ஆட்டம், கோணம் (வளைந்த காய்ப்பயறு)—காணம், நோடு—நாடு (நோட்டம்—நாட்டம்) E. holy day-holi day, fourteen night-fortnight, co-relation—correlation.

கால்=(பெ.) 1. பந்தல் தாங்குங் கம்பு. "வந்த வேலையை விட்டுவிட்டுப் பந்தற்காலைப் பிடித்தானாம்" (பழ.). 2. மண்டபந் தாங்கும் தூண். நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம். 3. விழாத் தொடக்கத்திற்கு அடையாளமாகப் பந்தற்கால் போல் நட்டுங்கோல் (கம்பு). "கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி" (சிலப். 5 : 144). 4. இவர் கொடிகள் பற்றும் பற்றுக்கோடு. (சூடா.) 5. மண்டபக் கால்போல் உடம்பைத் தாங்கும் உறுப்பு. மாந்தன் இரு காலுயிரி, 6. முழங்கால். 7. உடம்பில் நாலிலொரு பங்கான முழங்கால் போன்ற காற்பகுதி.

ஒ. நோ: அரு—அரை=கழுத்திற்குக் கீழ்ப்பட்ட வுடம்பில் அருகிய (சிறுத்த) இடம், உடம்பில் அரைபோற் பாதியளவு.

இடு—இடை=கழுத்திற்குக் கீழ் இடுகிய (ஒடுங்கிய) இடம், உடம்பில் இடைபோல் நடுவிடம்.

8. பாதம். "காலிற்குப் போடச் செருப்பில்லையென் பார்க்கும்" (தனிப்பா). 9. நெசவுத்தறியின் கான்மிதி. "காஞ்சிபுரம் போனால் காலாட்டிக் கொண்டு சாப்பிடலாம்." (பழ.) 10. காலால் நடக்கும் நடை. "காறூய்மை யில்லாக் கலிமாவும்" (திரிகடு. 46). 11. நடையால் அமையும் பாதை. (பிங்). 12. கால்போற் கட்டிலைத் தாங்கும் உறுப்பு. கட்டிற் கால்போல நால்வர். 13. வண்டிக்குக் கால்போன்ற சக்கரம்.

14. சக்கரமுள்ள வண்டி. ''கலத்தினுங் காலினும்'' (சிலப். 2 : 7). 15. தேர்ச் சக்கரம். ''கடலோடா கால்வ னெடுந்தேர்'' (குறள். 496). 16. பூவின் தாள். ''திரள்கால்......அலரி'' (நாலடி. 193). 17. குடையைத் தாங்கும் பிடி. ''குடைக் கால் போல்'' (நாலடி. 368). 18. கால்போல் தாங்கும் வாசல்நிலை. வாசற்கால். 19. வாசற்கால் போன்ற எழுத்து வரி. ''புள்ளியை இக் காலத்தார் காலாக எழுதினர்'' (தொல். எழுத். 17, உரை). 20. கால் போன்ற அடிப்பாகம். ''கனை கால் கழாலின்'' (புறநா. 120 : 5). 21. மூலம், பிறப்பிடம். ''மணிக்காலறிஞர்'' (கல்லா. முரு). 22. வில்லின் அடி குதை, முனை. ''ஒருதனு விருகால் வளைய'' (தேவா. 142 : 14). 23. அடிநிலம். நாற்றங்கால், பள்ளக்கால். 24. இடம். ''புனல் கால் கழீஇய பொழில்'' (பெரும்பாண். 380). 25. இடப் பொருளுருபு. ''கண் கால் கடை இடை தலைவாய் திசைவயின்'' (நன். 302). ''ஊர்க்கால் நிவந்த'' 26. கால் போன்ற சடைப்பிரிவு. இரண்டுகாற் பின்னல், இரட்டைக்காற் சடை.பிரிவு. ''தேசிக் குரிய கால்களும்'' (சிலப். 3 : 16, உரை). 27. இனமுறை, இரண்டாங் கால்முறை. 28. குடும்பம், சரவடி, இனவழி, ''பழைய காலைத் தூர்க்காதே, புதுக்காலை வெட்டாதே'' (பழ). 29 கால்போல் ஊன்றும் ஆலவிழுது. ''கான்மரம்'' (திவா.), 30 கால்போல் ஊன்றும் மழைப்பெயல். மழைக்கால் ஊன்றி விட்டது. 31. கால்போல் நீண்டு விழும் சுடர்க்கதிர். ''நிலாக்கால் விழுந்தனைய'' (மீனாட். பிள்ளைத். ஊசற். 1). 32. கால்போல் நீண்டு செல்லும் நீர்க்கால். ''சரபுவும் பலகாலி னோடியும்'' (கம்பரா. நாட்டுப். 60). வாய்க்கால், கால்வாய், கழிக்கால், ஆற்றுக்கால், வெள்ளக்கால், பள்ளக்கால். 33. நீண்டு வீசுங்காற்று. ''கால்கடிப் பாகக் கடலொலித்தாங்கு'' (பதிற்றுப். 68 : 1). 34. ஊதை நோய் (வாதரோகம்) ''காற்காளைப் காட்டி'' (372). 35. ஐம்பூதம். ''காலெனப் பாகென'' (பரிபா. 3 : 77). 36. எல்லையின்றி நீண்டு செல்லும் நேரம். (பிங்.). 37. செவ்வி. ''கான்மலியும் நறுந்தெரியல்'' (பு. வெ. 8 : 18). 38. தடவை. சென்றே பெறிப வொருகால்'' (நாலடி. 24). 39. ஒரு வினையெச்சவீறு. ''பழவினை வந்தடைந் தக்கால்'' (நாலடி. 123).

கால் (leg)—ம, க. கால், தெ., து. காலு ஒ. நோ : Gk. *Skelos*, leg.

கால் (காற்று)—தெ. காலி (g)—E. *gale*, very strong wind. Norw. *galen*, lead weather. கால்—காற்று.

கால் (நேரம்)—ம. கால்.

கால் (வி.) காலுதல்=1. (செ. கு. வி.) கால் நீளுதல் அல்லது ஊன்றுதல் போற் சிந்துதல். 2. வெளிப்படுதல். "உருமு கான்றென்னப் பல்லியங்களு மார்த்தன" (கந்தபு. முதனுட். 3). 3. பாய்தல் "விடர்கா லருவி வியன்மலை"—(சிறுபாண். 170)—(செ. குன்றுவி.) 1. கக்குதல் (திவா.) ம. கால்குக. 2. தோற்றுவித்தல் "பகல் கான்றெழுதரு பல்கதிர்ப் பரிதி" (பெரும்பாண். 2)

கால்—கான்றல்=1. கக்குதல். (திவா.) 2. இருமிக் கோழை துப்புதல். "வெண்ணரை பொரக்கான்று" (வேதாரணி வீரசேன. 24).

கால்=1. வெளிப்படும் அல்லது தோன்றும் முளை (பிங்.) 2. மரக்கன்று (பிங்.) 3. கன்று போன்ற மகன் (பிங்.) 4. முளை போன்ற குறுந்தறி. (சூடா.)

கன்று என்னும் இளமைப் பெயர் நிலத்திணைக்கும் விலங்கினத்திற்கும் பொதுவாயிருத்தலையும், சிறு பிள்ளைகளைக் கன்றுகயந்தலை என்னும் உலக வழக்கையும், கன்றுகுட்டி பிள்ளை யென்னும் மூவிளமைப் பெயர் இரு திணைக்கும் பொதுவாக வழங்குதலையும், நோக்குக.

கான்முளை=குடும்பத்தில் தோன்றும் குழந்தை, மகன். "பின்னர்க் கான்முளை மன்னுத லிலரே" (ஞான. 21 : 12).

குடைகால்=மரத்திற் குடைந்து செய்யப்பட்ட கலம். ஒ. நோ : குடைகரி (பொன்னுருக்குங் கரிக்குகை). குடைகால்—கடைகால்=1. வாளிபோற் பயன்படும் மரக்கலம். 2. பால் கறக்குங் கடைகால் போன்ற மூங்கிற் குழல். 3. கட்டிட அடிப்படைக்குத் தோண்டும் நீண்ட குழி அல்லது அகழி.

மரக்கால்=முதற்கண் மரத்தாற் செய்யப்பட்ட முகவைக் கலம்.

மரக்கால்—கால்=1. மரக்கால். "கால் பெருத்துப் பொலி சிறுத்தாலும்', (திருவிருத். 58, வியா. பக். 324.) 2. அளவு (கருவியாகு பெயர்).

கால் (தூண்)—காலம்=பெருந்தூண். ஒ. நோ : தூண்—தூணம்=பெருந்தூண். "பசும்பொற் றூணத்து"(மணி.1: 48).

கால் என்பதினின்று திரிந்த காலம் என்னுஞ் சொல், காலத்தை யுணர்த்துதல் போன்றே தூணத்தையும் உணர்த்து

தல் வேண்டும். ஆயின், அப் பொருள் இன்று வழக்கற்றது. பண்டை வழக்கைக் காட்டும் இலக்கியமும் இறந்துபட்டது.

ஒ. நோ: *L. columna*, pillar, *F.* colompne, *It.* colonna, E. *column*, (1) a pillar, support.

*It.* colonnata, F. colonnade, E. *colonnade*, a row of columns.

E. *column* (2) a vertical cylindrical mass of water mercury, smoke etc. அழற்பிழம்பு என்னும் வழக்கை நோக்குக.

(3) Vertical division of page in newspapers. செய்தித்தாட் கட்டங்கள் தூண்கள் போல் தோன்றுவதைக் காண்க.

(4) A body of troops resembling a column.

ஒ. நோ: தண்டு=படை. தண்டு—தண்டம்=படை, படை வகுப்பு வடிவம்.

E. *colonel*, highest regimental officer. L columna—*It.* colonna—colonello—*F.* colonel—E. colonel.

கீற்று (Skeat), கிளேயின் (Klein) முதலிய ஆங்கிலச் சொல்லியல் அதிகாரிகளெல்லாம் column என்னுஞ் சொல்லை, உயரத்தையும் மலையையுங் குறிக்கும் columen என்னும் இலத்தீன் சொல்லினின்றும், எழுதல் அல்லது உயர்தல் என்னும் கருத்தை யுணர்த்தக்கூடிய qel என்னும் கருதுகோள் வேர்ச் சொல்லினின்றும், திரிக்கின்றனர். அதுவும் பொருத்த மாகத் தோன்றுகின்றது. ஆயின், தூண்கள் இயற்கையாகத் தோன்றியவை யல்ல. தாங்குதல் என்னும் அடிநிலைக் கருத்தும் நீண்டிருத்தல் என்னும் வழிநிலைக் கருத்தும் தூணியியல்பிற்கு மிகப் பொருந்தும்.

கால்—காலை=(பெ.) 1. நேரம். பொழுது. (பிங்.) 2. தக்க சமையம். "காலைய தறிந்தனே" (கந்தபு. திருவவ. 14). 3. தடவை "முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண் டெழுவர்" (நாலடி. 24). 4. துயிலெழும் அல்லது வேலை தொடங்கும் விடியற்காலம், "காலையி லெழுந்தவுடன் காகத்தைப் பார்த்தல் கூடாது." (பழ.)

"காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல் யான்
மாலைக்குச் செய்த பகை." (குறள் - 1225)

5. பள்ளியெழுச்சி முரசம். "மேல்வந்தான் காலைபோல்...... துயிலோவெழுப்புக" (கலித். 70) 6. விடிகாலையெழுங் கதிரவன். "காலை யன்ன "சீர்சால் வாய்மொழி" (பதிற்றுப். 21 : 4). 7. பகல் முதற்பத்து நாழிகை, சிறுபொழுது ஆறனுள் ஒன்று. 8. முற்பகல். காலைப்பள்ளி. 9. பகற்காலம் "எல்லியிது காலையிது வென்ப தறிகல்லா" (சீவக. 1877) 10 வாழ்நாள் "நோகோ யானே தேய்கமா காலை" (புறநா. 234). 11. வாழ்நாட் காலத்தின் முற்பகுதி.

கு. பெ. எ. (adv.) பொழுதில். "அடுங்காலை நீர் கொண்ட வெப்பம் போல்" (நாலடி. 68)

கால்—காலம் = 1. காலப் பொது. "கால முலக முயிரே யுடம்பே" (தொல். கிளவி. 58). 2. விடியற்காலம். அவர் காலத்தாலே யெழுந்து போய்விட்டார். (ஆம்பூர் உ. வ.), "காலமே தேவனைத் தேடு" (வே. சா.) 3. தக்க சமயம்.

"காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்." (குறள். 485)

4. நற்காலம். தமிழுக்கு இன்னுங் காலம் வரவில்லை. 5. குறித்த காலம். "அக்காலத்துப் போலும் பாண்டியநாட்டைக் கடல் கொண்டது" (இறை, 1. உரை). 6. தீக்காலம், கேடு காலம். அவனுக்கும் ஒரு காலம் வரும். 7. இளமைக் காலம் "சென்றது காலம் சிதைந்த திளமை நலம்" (திருக்கருவை வெண்) 8. வாழ்நாள். மறைமலையடிகள் கால முழுதும் தமிழுக்கே பாடுபட்டார், அவர் காலமாகி விட்டார். 9. இறப்புக் காலம். அவனுக்குக் காலம் நெருங்கி விட்டது. 10. இளவேனில் முதுவேனில், கார், கூதல், முன்பனி, பின்பனி என்னும் அறு வகை இயற்கைக் காலம். 11. உழவுத் தொழிற்குச் சிறந்த மழைக்காலம் அல்லது கோடையல்லாக் காலம். காலச் சோளம், காலக் கேழ்ப்பை, காலப்பயிர். இவை முறையே கோடைச் சோளம், கோடைக்கேழ்ப்பை, கோடைப்பயிர் என்பவற்றிற்கு எதிர். 12. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்று இலக்கணங்கூறும் மூவகைத் தொடர்ச்சிக் காலம். 13. வெயில், மழை, பனி என்னும் மூவகை இயற்கை வேறுபாட்டுக் காலம். (தொல். புறத். 20, சோ. சு. பா. உரை) 14. சவுக்கம் (விளம்பம்) முடுக்கம் (துரிதம்), நடுப்பம் (மத்திமம்) என்னும் மூவகைப் பாட்டியக்கக் காலம். 15. ஒரு முரலிற்கு (சுவரத்திற்கு) இரு மாத்திரையும் ஒரு மாத்திரையும் அரை மாத்திரையும் கால் மாத்திரையும் எடுக்கும் முதற்காலம், இரண்டாங்காலம், மூன்றாங் காலம், நாலாங் காலம் என்னும் நால்வகை முரற்பயிற்சிக் காலம்.

16. கழகக் காலம் பிற்காலம் என்றும், கற்காலம் இருப்புக்காலம் என்றும், பல்வேறு வகையிற் பகுக்கப்படும் வரலாற்றூழிக் காலம். 17. கால மெய்ப்பொருள் (தத்துவம்).

காலம்—வ. கால.

சமற்கிருத ஆங்கில அகரமுதலி தொகுத்த மானியர் உவில்லியம்சு, தென்சொல்லை வடசொல்லாகக் காட்டும் கலையிலும், அதற்கேற்றவாறு பொருந்தப் பொய்த்தலிலும் பொருந்தாப் பொய்த்தலிலும் வடமொழியாளரை விஞ்சும் வகையில்,

வடமொழித் தாது பாடத்தில் (Dhatupaṭha) உள்ளவாறு *kal.* to sound, to count என்று எடுத்துக் கூறி, cf. L. *calculo* என்று இனமொழிச் சொல்லோடு ஒப்புநோக்கச் சொல்கின்றார்.

ஒலித்தலுக்கும் எண்ணுதல் அல்லது கணக்கிடுதலுக்கும் யாதொரு தொடர்புமில்லை.

calculus என்பது சிறுகல் என்று பொருள் படும் இலத்தீன் சொல். பண்டைக் காலத்திற் சிறு கூழாங்கற்களைக் கொண்டு எண்ணிப் பழகியதனால், calculate என்னும் வினைச் சொல் தோன்றிற்று. L. calx=கல். Gk. khalis. L. culus என்பது சிறுமைப் பொருளீறு (dim. suf.) இஃது எல்லா ஆங்கில அகர முதலிகளிலும் கூறப்பட்டுள்ளது. ஆகவே, காலம் என்னும் சொல்லிற்கு calculate என்னுஞ் சொல் மூலமாகாது.

கூழாங்கற்களைக் கொண்டு எண்ணிப் பழகிய காலத்திற் கணிக்கப்பட்டவை, காய்கறிகளும் காசும் போன்ற காட்சிப் பொருள்களேயன்றி, காலமும் நாளும் போன்ற கருத்துப் பொருள்களல்ல.

தமிழிற்போல், கால், காலை, என்ற சொற்கள் வட மொழியில் இல்லை. இவ்விரு சொற் போன்றே காலம் என்னும் சொல்லும் தமிழில் அடிப்படைச் சொல்லாகத் தொன்றுதொட்டு இருவகை வழக்கிலும் வழங்கி வருகின்றது. கால்—காலம். ஒ. நோ : வால்—வாலம்.

உலக வழக்கு

காலக் கொடுமை, காலங் கண்டவன், காலங் கடத்தல், காலங் கடத்துதல், காலங்கழிதல், காலங்கழித்தல், காலங் காட்டி, காலங்காலத்தாலே, காலங்கிட்டுதல், காலங்கூடுதல் காலங் கூடி வருதல், காலங்கெடுதல், காலஞ்செய்தல், காலஞ்

செல்லுதல், காலஞ்சொல்லி, காலத்தாலே, காலத்தின் கோலம், காலந்தள்ளுதல், காலந்தாழ்தல், காலந்தாழ்த்தல், காலப் பயிர், காலம் பண்ணுதல், காலம் பார்த்தல், காலம் பெற, காலம் போதல், காலம் போக்குதல், காலமல்லாக்காலம், கால மழை, காலமறிதல், காலமாதல், காலம் மாறுதல், கால மெல்லாம், கால வரம்பு, காலவரையறை, கால வழக்கம்;

அந்தக் காலம், இந்தக்காலம், எந்தக் காலம், ஆங்காலம், போங்காலம், வருங்காலம், ஆயிரங்காலத்துப் பயிர், ஊறு காலம், நல்ல காலம், கெட்ட காலம், கேடுகாலம், நீண்டகாலம், பஞ்சகாலம், பனிக்காலம், பேறுகாலம், போனகாலம், வந்த காலம், மழை காலம், வெயிற்காலம்.

பழமொழிகள்

காலஞ் செய்கிறது ஞாலஞ் செய்யாது.

காலத்திற் கேற்ற கோலம்.

காலத்திற் கேற்றபடி பெருச்சாளி காவடியெடுத் தாடின தாம்.

காலமல்லாக் காலத்திற் காய்த்ததாம் பேய்ச்சுரைக்காய்.

காலமறிந்து ஞாலம் ஒழுகு.

காலமறிந்து பிழையாதவன் வால மறுந்த குரங்காவான்.

காலம்போம் சொல் நிற்கும், கப்பல் போம் துறை நிற்கும்.

காலம்போன காலத்தில் மூலம்வந்து குறுக்கிட்டது.

மரபுக்கூற்று

காலமெல்லாம் பாடுபட்டும் கையில் கால் துட்டைக் காணேம்.

செய்யுள் வழக்கு (இலக்கணம்)

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம், முக்காலம், காலப் பெயர், கால மயக்கம், கால மலைவு, காலவழு, கால வழுவமைதி, கால வாகுபெயர், கால விடைநிலை.

தொல்காப்பிய நூற்பாக்கள்

*வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது*
*நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.* (வினை-1)

*காலந் தாமே மூன்றென மொழிப.* (ஷ 2)

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற
அம்முக் கால மும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே. (சூ 3)

குறிப்பினும் வினையினும் நெறிபடத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொ லெல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன வுரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே. (சூ 4)

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப. (சூ 10)

அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்
... ... ... ...
அப்பால் காலங் குறிப்பொடு தோன்றும். (சூ 16)

அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்
... ... ... ... ...
என்ன கிளவியுங் குறிப்பே காலம். (சூ 17)

"...காலக்கிளவி யுயர்திணை மருங்கில்..." (சூ 18)

"...காலக் கிளவி யஃறிணை மருங்கில்..." (சூ 24)

"அன்ன மரபின் காலங் கண்ணிய..." (சூ 32)

நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
... ... ... ...
செய்யும் செய்த என்னுஞ் சொல்லே. (சூ 37)

செய்தென் எச்சத் திறந்த காலம்
எய்திடன் உடைத்தே வாராக் காலம். (சூ 42)

முந்நிலைக் காலமுந் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும். (சூ 43)

வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர்.

"...செய்வ தில்வழி நிகழுங் காலத்து..." (சூ 45)

"வாராக் காலத்து வினைச்சொற் கிளவி..." (சூ 48)

"இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்..." (சூ 50)

ஏனைக் காலமும் மயங்குதல் வரையார். (சூ 51)

தொல்காப்பியம் கி. மு. 6ஆம் அல்லது 7ஆம் நூற்றுண்டில் தோன்றியதாயினும் "மொழிப", "என்ப", "என்மனுர் புலவர்", "வரையார்" என்னும் ஆசிரியர் கூற்றுக்களாலும்,

"செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"

என்னும் பனம்பாரனுர் கூற்ருலும், அதில் (தொல்காப்பியத்தில்) கூறப்பட்டுள்ள பண்டை யிலக்கணமெல்லாம் தலைக்கழகக் காலத்தின வென்றும், இந்திய ஆரியரின் முதல் நூலாகிய இருக்கு வேதத்திற்கு முற்பட்டதும், வேத ஆரியரின் முன்னேர் இந்தியாவிற்கு வருதற்கும் முந்தியதுமான, முதுபழந்தொன்மையன வென்றும், தெற்றெனத் தெரிந்து கொள்க.

இதுகாறுங் கூறிய இருவகை வழக்குச் சொற்களே போதுமாதலின், இலக்கணமல்லாத செய்யுட் சொற்கள் இங்குக் காட்டப்படவில்லை.

இருபத்தாறு செய்யுளுறுப்புக்களைக் கூறும் செய்யுளியல் முதல் நூற்பாவில்,

"கேட்போர் களனே காலவகை எனுஅ"

என்று தொல்காப்பியர் கூறியிருப்பதை ஊன்றி நோக்குக.

(தொடரும்)

---

ஒரு திருத்தம்

முந்தின இதழில் வந்த "தேவை" என்னும் விளம்பரத்தில், "தமிழ்" என்னும் முதற்சொல்லை நீக்கிவிட்டு, "ஒருவர்க்குரிய பதவி" என்பதற்குமுன் "தமிழ்ப் புலவர்" என்பதைச் சேர்த்துக் கொள்க.

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

(சிலம்பு ௩உ, பரல் ௬, உ௬௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

காளக உடை என்பது பிற்காலத்தில் கரிய உடை என்ற பொருளில் வழங்கிற்று.

> "காளக வுடையினன் கந்து காமனும்
> வாளொடு கனையிருள் வந்து தோன்றினன்''
>
> —சீவகசிந்தாமணி. 320.

பிற்காலத்தில் காளகம் கருமையென்ற பொருளில் வழங்கிய தால் காழக நாட்டோடு இருந்த தொடர்பு மறக்கப்பட்டது. கம்பராமாயணத்தில் காழகம் ஓர் உடை விசேடம் என்று கூறப் பட்டிருப்பினும் சீவகசிந்தாமணியில் கரிய ஆடை என்றே பொருள் கூறப்பட்டுள்ளது. அம்பை எய்யும்போது அணியும் கைக்கவசமாகப் பயன்பட்டதை 'வினைமாண் காழகம் வீங்கக் கட்டி' (கலி. 7) என்ற கலித்தொகைப் பாடல் குறிப்பிடுகின்றது. பிற்காலத்தில் காளிங்கங் கூட்டுதல், காளிங்கம், காளிக்க மெழுதுதல் ஆகிய வழக்குகளெல்லாம் துணிக்குக் கரியசாயம் கூட்டுதல், கருநீலச் சாயம் சேர்த்தல் என்ற பொருளிலேயே வழங்கியிருத்தலைக் காணலாம். பிற்காலத் தமிழிலக்கணத்திலும் "காளக ஆடையன் என்று இம் மாதிரியும்'' என்று கூறப் பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில் "பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும் கட்டு நுண்வினைஞர்'' என்று கூறப்பட்டுள்ளது. திவாகர நிகண்டில் ஆடையைப் பற்றிக் கூறும்போது பருத்தி ஆடை, பட்டாடை, நல்லாடை, மயிர்ப்படாம், கம்பளிப்படாம் என்று விளக்கப்பட்டுள்ளது. பட்டு விகற்பத்தைப் பற்றியும் இந்த நிகண்டு குறிப்பிட்டுள்ளது. பருத்தி ஆடை, பட்டாடை ஆகி யன ஏற்கனவே விளக்கப்பட்டன. நல்லாடை என்று பருத்தி, பட்டு ஆகியவற்றில் நேர்த்தியானவையும் நுண்மையானவை யும் சிறப்பானவையுமே குறிப்பிடப்பட்டுள்ளன என்பது உரை யாசிரியர்கள் விளக்கத்திலிருந்து தெளிவாகத் தெரிகின்றது. மயிர்ப்படாம், கம்பளிப்படாம் என்பன ஆராய்தற்குரியன. தமிழ்நாடு குளிர் மிகுந்த நாடு இல்லை என்பது தெரிந்ததாகும். ஆயினும் சங்க காலத்திற்குப் பின்னர் மயிர்ப்படாமும், கம்பளிப் படாமும் தமிழ்நாட்டில் பழக்கத்தில் இருந்தன என்பதற்கு

இலக்கியச் சான்றுகள் உள்ளன. சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்ட மயிர் ஆடைகளை நெய்வோரைப் பற்றிச் சீவகசிந்தாமணியைத் தவிர வேறு எந்தத் தமிழ் நூல்களும் கூறவில்லையென்பது கவனிக்கத்தக்கதாகும். சில விலங்குகளின் தோலோடு கூடிய மயிரால் அமைந்த ஆடை இயற்கையாகவே குளிரைத் தாங்கும். இந்த ஆடைகளையே 'மயிரினும் கட்டு நுண்வினைஞர்' என்று இளங்கோவடிகள் கூறினர். இதையே மயிர்ப்படாம் என்று திவாகர நிகண்டு கூறியுள்ளது.

மயிர்ப்படாம் என்பது மயிருடன் கூடிய தோலாடையாகும். ஆனால், கம்பளி என்பது மயிர் நிறைந்த ஒருவகை ஆடையாகும். ஆட்டு மயிரை வெட்டி நெய்த இந்த மயிர்ப்படாத்தைப் பற்றிச் சீவகசிந்தாமணி அரிய, நுண்ணிய சிறந்த செய்திகளைக் கூறியிருப்பது மிகவும் போற்றத் தக்கதாகும். மயிர்ப் படாத்தைப் பற்றிக் கூறிய செய்தி மிகப் பழங்காலத்திலும் உண்மையானதாக இருக்கலாம். இல்பொரு ளுவமையாக ஆமை மயிர்க்கம்பலம் என்று இலக்கண உரை கூறும். பன்மயிர்க்கம்பலம் இருந்ததால் இல்பொரு ளுவமையாக ஆமை மயிர்க்கம்பளம் என்றனர். ஆமைக்கு மயிர் இல்லை. சிந்தாமணி எலிமயிர்ப்போர்வை என்று ஒருவகைக் கம்பலத்தைப்பற்றிக் கூறுகின்றது. சிந்தாமணி கூறிய எலிமயிர்ப்போர்வை எளிதில் காணப்படும் எலியிலிருந்து எடுக்கப்பட்ட மயிர்ப்போர்வையன்று. மலையில் வாழும் எலிபோன்ற அரிய பெரிய விலங்கின் தோலிலிருந்து இந்தக் கம்பலம் செய்யப்பட்டது. இந்த எலிபோன்ற விலங்கைப் பூசையிற் பெரியது, பன்மயிர்ப்பேரெலி, மலையில் அகழ்வது என்று சிந்தாமணி கூறியுள்ளது. பூனையை விட பெரிய பலமயிர்களை உடைய பேரெலி என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். நச்சினார்க்கினியர் எலி என்றே பொருள் கொண்டது விலங்கு நூலறிவு இன்மையாலாகும். பலமயிரை யுடைய பூனையினும் பெரிய எலிபோன்ற விலங்கு மலையில் நிலத்தை அகழும் விலங்கு இன்றும் நீலகிரி முதலிய மலைகளின் உச்சிகளில் காடுகளில் காணப்படும். 'Marten' என்ற விலங்காகும். இது கீரி போன்று உருவிலும் அளவிலும் உள்ளது. இதே இனத்தைச் சேர்ந்த விலங்கு இமய மலையிலும், ஐரோப்பா, உருசியா, அமெரிக்க நாடுகளிலும் காணப்படுகின்றது. இந்த விலங்குகளின் பன்மயிர்த்தோலை குளிர்தாங்கும் சிறந்த ஆடையாகவும் மிக விலையுயர்ந்த ஆடையாகவும் செல்வமிக்க மகளிர் உடுத்துகின்றனர். இதை 'Fur Dress' என்று கூறுவர். சிந்தாமணியிலும் இந்த எலிமயிர்ப் போர்வை அரசர்கள் பயன் படுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. அரசர்களுக்குத் திறைப்

பொருளாகவும், காணிக்கைப் பொருளாகவும் இந்த எலிமயிர்ப் போர்வை தரப்பட்டதாகச் சிந்தாமணி கூறியுள்ளது கவனிக்கத் தக்கதாகும்.

"வயிரமணிக் கலன்கமழுங் கற்பகநன் மாலை
உயிரைமதஞ் செய்புமதுத் தண்டொடுடை யாடை
செயிரினறுஞ் சாந்துசிலை யம்புமணி யயில்வாள்
மயிரெலியின் போர்வையொடெம் மன்னன்விடுத் தானே".
—சிந்தாமணி 1874

கலுழவேகன் எலிமயிர்ப் போர்வையோடே கலன் முதலிய வற்றை வரவிட்டானென்பதை இப்பாடல் குறிப்பிடுகின்றது. அரசர்க்குத் தரும் அரிய விலையுயர்ந்த பொருளாக எலிமயிர்ப் போர்வை கூறப்படுவதால் இந்த ஆடை எளிய ஆடை அன்று என்பதும் தெளிவாகின்றது. இழிவான விலங்காகக் கருதப் படும் 'எலியின் மயிரால் செய்யப்பட்ட போர்வை' என்று உரை கூறியது நகைப்புக்குரியதாகும். சங்க காலத்து இயற்கை வாழ்விலிருந்தும் அறிவிலிருந்தும் தொடர்பில்லாது பிற்காலத்து வாழ்ந்தவர் உரை கூறும்போது இத்தகைய பொருத்தமற்ற பொருள் கூறினதில் வியப்பில்லை. எலிக்கு உயரிய சிறந்த பன் மயிர்த்தோல் கிடையாது என்பதையும் கருதவேண்டும். வள்ளுவர் மனிதனின் தலையிலிருந்து வீழ்ந்த மயிரையும் இழிந்த தாகக் கருதினர். ஆதலின், இந்தப் பன்மயிர்ப்போர்வை இழிந்த எலியின் மயிரிலிருந்து செய்யப்பட்டதாகக் கருதுவது மிகவும் தவறாகும். அரசர் அரண்மனையில் திரைச் சீலைக்குரிய துணியாகவும் பயன்பட்டதைச் சிந்தாமணி குறிப்பிட்டுள்ளது. மிகவும் அரிதான மயிராடையாக இருத்ததென்பதை எங்கு மில்லாத எலிமயிர் கொண்டு செய்த ஆடை என்று கூறியதி லிருந்து தெளிவாகின்றது. பொங்கும் பூம்புகைபோன்று அவ் வளவு மெல்லிய ஆடை என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். சங்க இலக்கியத்தில் பொங்கும் நுரைபோன்ற படுக்கையை 'நுரைமுகந்தன்ன மென்பூஞ் சேக்கை' என்று கூறியுள்ளதைப் போலவே சிந்தாமணியும் இந்த எலிமயிர்ப் போர்வையைப் பற்றிக் கூறியுள்ளது. இதிலிருந்து இந்த எலிமயிர் மிகவும் மென்மையானது, நுரையைவிட புகை போன்று நுண்மையானதாகக் கருதப்பட்டது தெளிவாகின்றது. இக் காலத்தில் 'Foam Bed' என்று விளம்பரப்படுத்துவது இரப்பர் பாலில் நுரையாக்கப்பட்டுச் செய்யப்பட்ட படுக்கை யாகும். ஆனால், இத்தகைய படுக்கையின் சிறப்பை இரண்டா யிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சங்கப் புலவன் பாடியுள்ளான் என்பதைக் கவனிக்கும்போது தமிழர் நாகரிகத்தில் எவ்வளவு சிறந்து வாழ்ந்தனர் என்பது தெரிகின்றது.

"தொங்கு விம்மூபூங் கோதை மாதரார்
பங்க யப்பகைப் பருவம் வந்தென
எங்கு மில்லன வெலிம யிர்த்தொழிற்
பொங்கு பூம்புகைப் போர்வை மேயினார்"

—சிந்தாமணி 2680.

முன்னர் கூதிர் காலத்தே குளிரை அஞ்சி மேகலையை நீக்கி முத்தையும் சிந்தினவர்கள் பின்னர்ப் பனிப்பருவம் வந்ததாகத் தொழிலினையும் புகையினையுமுடைய எங்குமில்லனவாகிய எலி மயிர்ப்போர்வையை மேவினர் என்று நச்சினார்க்கினியர் இந்தப் பாட்டிற்கு உரை கூறினார். குளிர் காலத்தில் செல்வப் பெண்டிர் எங்குமில்லாத எலிமயிர்ப்போர்வையை மேவினர் என்றது சிறப்பான செய்தியாகும். ஆனால், புகையினுடைய போர்வையென்று உரை கூறினது பொருத்தமற்றது. புகை போன்று நுண்மையும் மென்மையுமுடையதும் நெய்தல் தொழிலையுடையதுமான ஆடை என்று பொருள் கூறாது நச்சினார்க்கினியர் மயக்கமான உரை கூறினார். சங்க நூல்களில் ஆவி போன்ற, புகை போன்ற நுண்ணிய, மென்மையான ஆடை என்று கூறுவது மரபாகும். இக் காலத்திலும் இந்த விலங்குகளின் (Fur Coat) தோலாடை மிக மிக விலையுயர்ந்தவை யாகக் கருதப்படுகின்றன. மிகச் சிறந்த, பெருமை பெற்ற நடிகைகள் அணியும் ஆடையாகக் குளிர் மிகுந்த மேல் நாட்டில் இந்த ஆடை கருதப்படுகின்றது. இந்த ஆடையைக் கழுத்தாடை யாகப் பயன்படுத்துகின்றனர். ஆயினும் இந்த ஆடைகள் தமிழ் நாட்டில் முற்காலத்திலேயே வழங்கின என்பதைக் காணும்போது வியப்புறாமல் இருக்க முடியாது. மகளிர் மட்டும் பயன்படுத்தினர் என்று கருத இடமில்லை. ஆடவரும் அணிந்த னர் என்பது சீவகசிந்தாமணிப் பாட்டிலிருந்து தெரிகின்றது.

"உருவ மார்ந்தன வுரோமப் பட்டுடுத்
தெரியும் வார்குழை சுடர விந்திர
திருவி லன்னத்தார் திளைப்பத் தேங்குழல்
அரிபெய் கண்ணியர்க் கநங்க னாயினான்"

—சிந்தாமணி 2425

செந்நிறமான உரோமப் பட்டாடையை, எலிமயிரால் செய்த பட்டாடையை ஆடவரும் அணிந்தனர் என்பது மேலே கூறப்பட்டுள்ளது. ஆதலின் இது பட்டு போன்ற மிகவும் மெல்லிய மயிர் ஆடையாகக் கருதப்பட்டது தெரிகின்றது. இந்தக் கம்பளி ஆடையைப் பிற்காலத்து நூலாகிய சிந்தாமணி யும் போர்வை என்றே குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். கம்பளி என்று சொல்லவில்லை. ஆதலின் "சோழன் போர்வைக்

கோப்பெருநற்கிள்ளி'' என்ற சங்க காலச் சோழ அரசனின் பெயர் எப்படி வந்தது என்று ஆராயும்போது ஒரு புது விளக்கம் தெரிகின்றது. நார்முடிச்சேரல் என்று சேர அரசன் பெயர் வரும்போது சேர அரசின் பொன் மகுடத்தை இழந்து நார்முடிச் சேரல் என்று பெயர் பெற்றது தெரிகின்றது. அதுபோன்றே 'போர்வைக் கோப்பெருநற்கிள்ளி' என்ற பெயர் சிறந்ததொரு போர்வையை அரிதினின் அடைந்து அணிந்த சோழன் என்பதையே குறிக்கின்றதென்று கருதவேண்டும். இந்தப் போர்வை அரிய, விலையுயர்ந்த ஆடை என்பதில் ஐயமில்லை. இல்லையேல் 'போர்வைக்கோப்பெருநற்கிள்ளி' என்று சொல்ல வேண்டியதில்லை. இந்தப் போர்வை பன்மயிர்ப்பேரெலியின் தோலால் தொழில் செய்யப்பட்ட ஆடையாக இருக்க வேண்டும். இத்தகைய சிறப்பான போர்வையை முதலில் அணிந்த சோழன் ஆனதால் 'போர்வைக்கோப்பெருநற்கிள்ளி' எனப்பட்டான்.

சோழர் குலத்தில் கிள்ளி என்ற பெயரில் பிற சோழ மன்னர்களும் இருந்ததால் அவரினும் பிரித்துக்காட்டச் சிறப்பான ஆடையான பன்மயிர் ஆடையால் ஆன போர்வையை அணிந்த இந்த நற்கிள்ளி சிறப்பாக விளிக்கப்பட்டான் என்று கருதலாம். சிறந்த கலிங்க ஆடையால் ஆன போர்வையை அணிந்த நள்ளி என்ற குறுநில மன்னன் நடுங்கிய மயிலுக்குத் தன் போர்வையை அளித்ததைப்பற்றிச் சங்கநூல்கள் கூறியுள்ளதையும் இது சார்பாகக் கவனிக்க வேண்டும். இக்காலத்தில் நாகரிகம் அடைந்த தமிழர்கூட இந்தப் பன்மயிருடைய விலங்கு எதுவென்பதைத் தெரியாதுள்ளனர். ஆனால், இக் காலத்தினும் மலைவாழ் பழங்குடி மக்கள் இந்த விலங்கை நன்கு உணர்ந்துள்ளனர் என்பதைக் காணும்போது வியப்படையாமல் இருக்க முடியாது 'மார்ட்டென்' என்ற இந்தப் பன்மயிர் விலங்கைத் துளு மொழியில் இன்றும் 'பெரு' என்று அழைக்கின்றனர். வெருகு என்ற பெயர் சங்க நூல்களில் காட்டுப் பூனையின் பெயராகும். காட்டுப் பூனைபோல இருப்பதால் 'பெரு' என்றனர். வடமலையாளத்தில் இதை 'மெரு' என்று இன்றும் அழைக்கின்றனர். நன்னன் வாழ்ந்த ஏழில்மலையில் 'மெரு' என்றே இதை அழைத்ததை நான் கேட்டேன். இதை 'மெரு' என்று அழைப்பதையும் இது 'Marten' என்ற விலங்கு, என்பதையும் நேரில் சென்று கண்டு ஆராய்ந்து அறிந்தேன். இன்றும் கொல்லி மலையில் வாழும் பழங்குடி மக்கள் (Tribes) இந்த விலங்கை 'வெருகு' என்றழைப்பதைக் காணும்போது சங்க இலக்கிய மரபு இன்றும் மறையவில்லை என்பது தெரிவாகின்றது.

எலி மயிர்ப் போர்வையைப் பற்றிய செய்தி இக் காலத்து மேல்நாட்டுச் செய்திகளுடன் மிகவும் ஒத்துள்ளது. குளிர் காலத்தில் நடுக்கத்தை நீக்கி உடலுக்கு வெம்மை தரும் ஆடையாகப் பயன்படுத்தியதைச் சிந்தாமணி கூறியுள்ளது.

"செந்நெ ருப்பு ணுஞ் செவ்வெ லிம்மயிர்
அந்நெ ருப்பள வாய்பொற் கம்பலம்
மன்ன ருய்ப்பன மகிழ்ந்து தாங்கினர்
என்ன ரோப்புமில் லவர்க ளென்பவே" —சிந்தாமணி 2686

நெருப்பைத் தின்னும் எலியின்மயிர்க் கம்பலம் அந்த நெருப்பின் அளவு வெம்மையானதாவென்று ஆராய்ந்த பொலிவினையுடைய கம்பலம் என்று நச்சினார்க்கினியர் கூறினர். நெருப்பைத் தின்னும் என்றது நெருப்புச் சூட்டைப் பாதுகாக்கும் தன்மையைக் குறித்ததாகும். உடற் சூட்டை வெளிவிடாது காக்கும் ஆடையாக இந்தக் கம்பல ஆடைகள் (Furcloth) இன்றும் உதவுகின்றன. மன்னர் உய்ப்பனர் என்று கூறியதற்கு அரசர்கள் திறையாகப் பெற்றதென்று நச்சினார்க்கினியர் விளக்கம் கூறியிருப்பதைக் காணலாம். மன்னர் திறையாகப் பெற்ற வெம்மை வாய்ந்த பொலிவான சிவந்த கம்பல ஆடையைப் பின்பனிக் காலத்தில் மகளிர் அணிந்து எப்படிப் பட்டவரும் ஒப்பில்லாதவராக இருந்தனர் என்று கூறியதிலிருந்து இது வெளிநாட்டிலிருந்து திறையாகப் பெற்ற ஒப்பற்ற விலைமதிக்கமுடியாத சிறந்த ஆடை என்று தெரிகின்றது. மேல்நாட்டு நடிகைகள் ஒப்பற்றவராக உலகம் கருத இத்தகைய ஆடைகளை அணிவது கவனிக்கத்தக்கது.

எலிமயிர்ப் போர்வையைப் பற்றிக் கூறியதுடன் இந்த எலியையும் விளக்கியுள்ளார்.

"புகழ்வரைச் சென்னிமேற் பூசையிற் பெரியன
பவழமே யனையன பன்மயிர்ப் பேரெலி
அகழுமின் குவிகமஞ் சனவரைச் சொரிவன
கவழயா னையினுதற் றவழுங்கச் சொத்தவே"
—சிந்தாமணி - 1898

மலையுச்சியில் வாழ்ந்த எலியென்றும், பவழம்போன்று சிவந்த நிறமானது என்றும் கூறியிருப்பதால் மலையில் வாழும் விலங்கு என்பதில் ஐயமில்லை. சிந்தாமணியில் "வீழ்பனிப்பாறை"யின் சூழ்நிலையில் இந்த விலங்கு கூறப்பட்டுள்ளதால் இமாலய மலையில் வாழ்ந்த இந்த விலங்கையும் தெரிந்தே கூறினர் என்று கருதவேண்டும். கருப்பூரம், இலவங்கம் விளையும் மலையிலும்

வருடை என்ற விலங்கு மலையுச்சியில் வாழும் சூழலிலும் இந்தப் பேரெலி கூறப்பட்டிருப்பதால் இந்த விலங்கிலிருந்து செய்த ஆடை ஓர் உயர்ந்த மயிர்ப்படாம் என்பதில் ஐயமேயில்லை. இந்த விலங்கு இமாலய மலையிலும் நீலகிரி மலையிலும் வாழ்ந்தது என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இதன் தோலாடையைக் குளிர் தாங்கும் சிறந்த போர்வையாகச் சங்க காலத்திலிருந்து கருதினர் என்று தெரிகின்றது. இந்த விலங்கின் தோல் மிகவும் மென்மையானது, சிவந்தது, அழகானது என்பதைக் குறிப்பிட்டு "இந்திரகோப நிறத்த பன்மயிர்ப் பேரெலியகழ்ந்தது" என்று பிற்காலக் கூர்மபுராணம் கூறியுள்ளது. இந்திர கோபப் பூச்சியின் உடலைத் தொட்டால் 'வெல்வெட்' (velvet) போன்று மிகவும் மென்மையாகவும், கடுஞ்சிவப்பாகவும் காணப்படும். இந்த உவமை பன்மயிர்ப் பேரெலியின் (Marten) உண்மைத் தன்மையைத் தெளிவாக விளக்குகின்றது. பவழம் போன்ற நிறம் என்று கூறியதும் உண்மையே. இந்த மலை வாழ் விலங்குகளில் சில பவழநிறமுடையனவாகும். யானையின் நெற்றியில் தவழுங் கச்சு போன்றதென்றதால் யானையின் முகபடாம் போன்றதென்று தெரிகின்றது.

*"முதுமரப் பொந்து போல முழுமெயும் புண்களுற்றார்க்*
*கிதுமருந் தென்ன நல்லா ரிழுதுசேர் கவளம் வைத்துப்*
*பதுமுகன் பாவை மார்பி னெய்க்கிழி பயிலச் சேர்த்தி*
*நுதிமயிர்த் துகிற்குப் பாயம் புகுகென நூக்கி னானே"*

—சிந்தாமணி - 819

காயம்பட்டவர்களுக்கு நெய்க்கிழிப்பொதிந்து காற்றுப் புகாதபடி எலிமயிர்ப் படத்தினால் செய்த சட்டையை அணிவித்தனரெனக் கூறியதைக் கவனிக்கவேண்டும். எலிமயிர் ஆடை தோலாடை என்பதால் உள்ளே அடைச்சின சட்டையென்று கூறினர். உள்ளே துணியும் வெளியே மயிரும் ஆகிய ஆடையைச் சட்டையாக அணிந்தால் விரைவில் புண்கள் ஆறும் என்று கருதினர். ஆதலின் எலிமயிர்ப் போர்வையைச் செல்வமிக்க மகளிர் குளிர் கால ஆடையாகப் பயன்படுத்தினர். ஆடவரும் பயன்படுத்தினர். சீவக சிந்தாமணியில் மணமான செல்வர் சாந்தி கழிக்கும் அமளியைச் சுற்றித் திரையாக எலிமயிர்ப் போர்வை இருந்ததாகக் கூறியதைக் காணலாம். இச்செய்தியைச் சிந்தாமணி கூறுவதால் இது சோழர் காலத்துப் பன்னிரண்டாம் (அ) பதின்மூன்றாம் நூற்றாண்டுச் செய்தியாக இருக்கலாம். ஆயினும் இதுபோன்ற செய்தியை 13 ஆம் நூற்றாண்டில் தமிழகத்து வந்த மார்க்கோபோலோ என்பவன் (Marcopolo) மங்கோலிய அரசனைப் பற்றிய செய்தியில் கூறுவதால் இது சிந்தாமணி

கூறும் செய்திச் சான்ருேடு எண்பிக்கப்படுகின்றது. மங்கோலிய அரசன் 'குப்ளய்கானின்' (Kublai Khan) கூடாரம், துணிகளை உள்ளே தைத்த எலிமயிர்த் தோலால் அமைந்திருந்ததாக 'மார்க்கோபோலோ' கூறுவது சிந்தாமணி கூறிய செய்தியுடன் மிகவும் ஒத்துள்ளதைக் கவனிக்க வேண்டும். இந்த ஆடையைத் தற்காலத்தில் 'Fur coat' என்பர். பெரிய அரசர்களும், செல்வர்களும், நடிகைகளும் அணியும் விலைமிக்க ஆடைகளாகும். இந்த வகை ஆடைகளுக்காக விலங்குகளை வேட்டையாடுகின்றனர். இக்காலத்தில் உருசியா நாட்டில் இந்த விலங்குகளைச் செயற்கை முறையில் பண்ணையில் வளர்த்து 'எலிமயிர் ஆடைகளை' ஏற்றுமதி செய்து பெருஞ்செல்வத்தைப் பெறுகின்றனர். இத்தகைய விலைமிக்க அரிய ஆடைகளையும் பழந்தமிழர் அணிந்து வந்தனர், தமிழ் நாட்டில் செய்து வந்தனர், பிறநாடுகளில் இருந்து தமிழ் மன்னர் திறையாகப் பெற்றனர், மருத்துவத்திலும் பயன்படுத்தினர் என்ற செய்திகளைப் படிக்கும் போது பழந்தமிழரின் சிறந்த உயரிய நாகரிகத்தையும் அழகுணர்ச்சியையும் நுகர்ச்சிச் சிறப்பினையும் போற்ருமல் இருக்க முடியாது.

——— (தொடரும்)

## பாட்டுப் பற்றிய ஆராய்ச்சி

உலக இயற்கையிற் கண் முதலான புலன்களுக்கு விளங்கித் தோன்றும் அழகையெல்லாந் தன்னகத்தே நெருங்கப் பொதிந்து வைத்துப்பின் அவற்றை நம் அறிவினிடத்தே புலப்படும் வண்ணந் தோற்றுவித்துப் பொருள் நிகழ்ச்சியோடு மாறுபடுதல் இல்லா இனிய ஓசையுடன் நடைபெறும் இயல்பினை உடையதுதான் பாட்டென்று அறிதல் வேண்டும். இன்னும் எங்கெங்கு நம் அறிவைத் தம் வயப் படுத்துகின்ற பேரழகும் பேரொளியும் பெருந்தன்மையும் விளங்கித் தோன்றுகின்றனவோ, அங்கெல்லாம் பாட்டு உண்டென்றே அறிதல் வேண்டும்.

—மறைமலையடிகள் (முல்லைப் பாட்டு ஆராய்ச்சி )

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௩௨, பரல் ௬, பக்கம் ௨௭௮-இன் தொடர்ச்சி)

இரண்டாம் பிரிவு :

முதல் பிரிவில் 'அசத்துப்' பொருள்களின் இயல்பு உணர்த்தப்பட்டது. இந்த இரண்டாம் பிரிவில் 'சத்துப்' பொருளின் இயல்பு உணர்த்தப்படுகிறது.

அறிவினுல் அறியப்படும் சுட்டுப்பொருள்கள் 'அசத்து' என்றும், ஒரு வகையாலும் உணரப்படாத பொருள் இவ் பொருளேயாம் என்றும் முன்பு சொல்லப்பட்டது.

வேறு இரண்டு வகையாகவும் இந்த இரண்டாம் பிரிவில் சொல்லப்படுகிறது. நூற்பாவில் 'இரண்டு வகையின்' என்று வருவதன் சிறப்புப் பொருளாக இதனைக் கூறிக் கொள்ளலாம். வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத கடவுள் (அதீதம்) என்றது, ஒரு வகை; வாக்கு என்றது 'பாச ஞானம்'; மனம் என்றது 'பசு ஞானம்' இவற்றிற்கு எட்டாதவன் கடவுள். ஆனுல், அவன் எட்டுவான் (கோசரமாதல்) என்பது மற்றொரு வகை. எட்டாத கடவுள், உயிர்களுக்கு உண்டாகும் பதிஞானத்தில் எட்டி வருவான். தனது கருணையால் அவன் அவ்வாறு உணரப்படுகிருன்! ஒரு வகையால் எட்டாமலும், மற்றொரு வகையால் எட்டியும் வருகின்ற இந்த 'இரண்டு வகையாய்' விளங்குவது, சத்தாய் உள்ள சிவம்!

இதற்காக ''வாக்கு மனுதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம்'' என்று ஆசிரியர் மேற்கோளில் சொல்லிக் கொண்டார்.

இதில், 'அதுவே' என்று கடவுளையும் ஓர் அறிவிலாப் பொருள் போல எண்ணிச் சொல்லும்படி நேர்ந்துவிட்டது. சிவ ஞானத்தால் உணரப்படும்போது, எல்லார்க்கும் பொதுவாய் உருவங் கடந்ததாய் இருத்தலால், சிவம், 'அது' எனப்பட்டது. மற்றப்படி 'அது' என்று குறிக்கப்பட்டதனுல் அதன் பேராற்றலுக்கு இழுக்கு ஏதுமில்லை. அஃறிணை முடிவு கொள்ளும் உயர் திணைப் பெயர்; (பத்துப்பாட்டு, 1 : 256. நச். உரை.)

'வாக்கு மனுதீதமாய் என்று அதீதமாய் உரைப்பதை, இன்னதென்று அறியப்படாத பொருள் (அநிர்வசனம்) என்று

சொல்லிவிட்டால் என்ன? என 'மாயாவாதிகள்' கூறக் கூடும். ஓராற்ருல் எட்டுகிறது (கோசரமாகிறது) என்று ஏன் சொல்ல வேண்டும்? என்பது அவர்கள் கருத்து.

உணரக்கூடிய பொருளே, இன்னதென்று உணரப்படாதது என்று சொல்லுவது எப்படி?

வாக்கு மனங்களுக்கு எட்டாத நிலை என்பதும் பெருமானின் பேராற்றலை உணர்த்தும். அவற்றிற்கு எட்டும் என்பதும் பெருமானின் பேராற்றலை உணர்த்தும். இரண்டு வகையும் இறைவன் பேராற்றலை உணர்த்துமாஞல், இப்படி விளக்கமான அப் பொருளுக்குப் புதிதாக ஒரு விளக்கம் கூறவேண்டுவதில்லையே! மாயாவாதிகள் சொல்லுகிறபடி ஒராற்ருனும் உணரப்படாத பொருளாயிருந்தால் அதை 'அநிர்வசனம்' என்றே கூறிவிட லாம்; இல்லாத பொருளாயிருந்தால் அதனைப் 'பாழ்' என்றே கூறிவிடலாமே! ஆனுல், 'பிரமம்' என ஒரு பொருள் இருப்பதாக வன்ருே மாயாவாதியர் கூறுகின்றனர்! அப்படி விளக்க மில்லாமல் ஒரு பொருள் இருக்குமாஞல் எஞ்ஞான்றும் அது விளக்கமில்லாததே என்று கூறநேரும்: பதிஞானம் உண்டாகும் போது அது விளங்குகிறதே! இவ் வியல்பு நன்கு விளங்கும் பொருட்டே 'பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மை யானும்' என்று ஆசிரியர் தம் மேற்கோளுக்கு ஓர் ஏதுவும் கூறினர்.

இதனை மேலும் விளக்கக் கூடிய ஒரு செய்யுள்:

"எண்ணிய சத்தன் றசத்தன்ரும் என்றல் என்
கண்ணி புளதென்றல்? மெய்கண்டான்—எண்ணி
அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்
அறிவறியா மெய்ச்சிவன்தா ளாம்'.'

பொருள்:

எண்ணிய சத்து அன்று அசத்து அன்ரும் என்ருல் உளது என்றல் என் கண்ணி - கருதப்படும் சத்துப் பொருளும் அன்று, அசத்துப் பொருளும் அன்ரும் என்று கூறுவதாஞல் அப்படி ஒரு பொருள் இருக்கின்றதென்று சொல்லுதலால் மட்டும் என்ன பயன் கருதி; மெய்கண்டான் - உண்மையை அறிய விரும் பியவன்; எண்ணி அறிய - மெய்ப் பொருளாகிய சத்தின் இயல்பை ஆராய்ந்து அறிய; அசத்து இரண்டு ஆம் - அசத்துப் பொருள் என்ருல் அது, தனக்கு இரண்டாவது பொருளாகும்; ஆதல் - ஆதலால், சத்து ஆம் - சிவசத்துசத்தின் இயல்

புடையதாய் ஒன்றித்து நிற்கும் பொருளேயாம்; அறிவு அறியா மெய்-காரணம்; உயிர்களின் அறிவால் (பாச பசு ஞானத்தால்) அறியப்படாத மெய்ப்பொருள்; சிவன் தாள் ஆம்-பதிஞானத்தால் எட்டுவதாய்ச் சிவத்தின் அருளாய் விளங்கும்.

இறுதியில் உள்ள 'ஆம்' என்பது விளங்கும் என்னும் பொருட்டு.

வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத பேராற்றலுடைய இறைவன் தானே கருணையினால் எட்டி வருகிறான் என்பது விளங்கச், 'சிவன் தாள்' என்றார்; 'தாள்' என்பது, அருள்!

வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத பொருள் என்று ஒரே வகையாகச் சிவசத்தைச் சொல்லிவிடாமல், எட்டும் பொருளாக வேறே ஏன் சொல்ல வேண்டும் என்றும் தோன்றும்.

எட்டாப் பொருளால் யாருக்கு என்ன பயன்? இன்னதென்று புலப்படுத்த முடியாமல் ஒரு பொருள் இருக்கின்றதென்று ஏன் சொல்லவேண்டும்? காரணம் என்ன இருக்கிறது? எட்டாத பொருளாய் இருந்துவிட்டால், 'உயிர்க்கு உயிர்' என்று சொல்லத்தான் வாய்ப்பு ஏது? உயிர்க்கு இரண்டாவதாய் வேறாகவும் கொள்ளப்படுமே! இயற்கையில் உயிர்க்குயிராய்ச் சிவஞானத்தால் உணரப்படுகிறது என்றும், உயிர்கள் அதனைத் தமது பேருணர்வினால் ஒற்றித்து உணர்கிறது என்றும் அதனால் பேரின்பமும் உண்டாகிறது என்றும் சிவஞானிகள் சொல்லுகிறார்களே!

இதனை விளக்குவதாக வருகின்ற செய்யுள் இது:

*"உணர்ப அசத்தாதல் ஒன்றுணரா தொன்றை*
*உணருநீ தானுணராய் ஆயின்—உணரும் உனின்*
*தானிரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்*
*தானிரண்டாய்க் காணான் தமி".*

பொருள்:

உணர்ப அசத்து-உயிரறிவினால் அறியப்படும் பொருள் அசத்தாகும்; ஆதல் ஒன்று ஒன்றை உணராது - ஆதலால் அவை தம்முள் ஒன்று மற்றொன்றை அறியாமையோடு தன்னை அறிவிக்கும் உயிரையும் அறியாது; உணரும் நீதான் உணராய் - அவற்றையெல்லாம் அறிவிக்க அறிகின்ற நீயும், நின்னை அறிவிக்கும் இறைவனை அறியாய்; ஆயின்-இந்த நிலைகளை ஆராய்ந்தால்; உணரும் உனின் தான் இரண்டாம - பசுபாச ஞானங்களாகிய அறிவு நிலையை மட்டும் உடைய உனக்கு அவ்வசத்துக்களெல்

லாம் இரண்டாம் பொருளாக வேருய் முடியும்; மெய்கண்டான் - சிவஞானத்தால் உண்மையை உணரலுற்ருேன்; தன்ருல் உணர்தலால்-சிவத்தின் அருளால் ஒன்றி உணர்வுபெறுதலால்; தான் இரண்டாய்க் காணுன் தமி - உயிர் அச் சிவத்தைத் தனியனுய் வேறு பொருளாக இரண்டாவதாய்க் காணமாட்டான்.

ஒன்ருகவே காணும் என்பது கருத்து. 'உன்னின்' என்பது 'உனின்' என இடை குறைந்து வந்தது. 'நீதான் உணராய்' என்னுமிடத்தில் 'தான்' என்பது, 'நீயோ' என்னும் பொருட்டு; 'தான் இரண்டாம்' என்ற இடத்தில் 'தான்' என்பது அசத்துப் பொருள்; 'தான் இரண்டாய்' என்னுமிடத்தில் 'தான்' என்பது உயிர்; தன்ருல் - இறைவனருளால்!

இனி, உயிர் என்பது, தன்னுற்றலால் இறைவனே உணர முடியாது; பெருமானது அருள் உயிரினிடம் பதிந்தால் உயிர் அவனே அறிய முடியும் ஆகவே, வாக்குக்கும் மனத்துக்கும் எட்டுவதென்பது, இறைவனே அருள் செய்வது! ஆனுல், 'யோகம்' கூறும் 'பாதஞ்சலர்', தமது பாவனேயால் அதனேப் பெறலாம் என்று கூறுவர். அதற்கு ஆசிரியர், 'யோக நூலின் படி வருகிற பாவனே பயன்படுவதில்லே; இறைவனே அருள் செய்தால் மட்டுந்தான் உண்டு' என்கிருர். அந் நிலேயிலேதான் அம் மெய்ப்பொருளேத் தேனிக்க முடியும் எனவும் அல்லாவிட்டால் வெறும் பாழைத்தான் தேனிக்க வேண்டும் எனவும், அதனுல் என்ன பயன் எனவும், கேட்கிருர்.

யோக நூலின்படி அமைந்த பாவனேயை நான்கு வகையாக ஆசிரியர் பகுத்துக்கொண்டு, விளக்குவர்.

1. மனத்தால் பாவிப்பது.

2. மனம் முதலிய கருவிகளிலிருந்து நீங்கிப் பாவிப்பது.

3. இன்னதென்று தோன்ருதது என்னுங் கருத்தில் பாழைப் (அநிர்வசனத்தைப்) பாவிப்பது.

4. பாவனேக்கு எய்தாத பொருளே எய்தியதாக வைத்துப் பாவிப்பது.

இந்த நான்கும் 'யோக' நூலார் கூறும் பாவகமே! இந்த நான்கும் இங்கே மறுக்கப்படுகின்றன.

முதல்:

மனம் முதலிய கருவிகளால் பாவிப்பதனுல் பாவிக்கப்படும் பொருள் 'அசத்'தாகும்.

இரண்டு :

கருவிகளை நீங்கிப் பாவிப்பதென்றால், கருவிகளால் அறிவு உண்டாகும் நிலையில், வேறு எதனால் பாவிப்பதென்று தெரிய வேண்டும். கருவிகளிலிருந்து நீங்கிவிட்டால் உயிர் அறிவு பெறுவதில்லை. வெறும் அறியாமை இருளில் கிடக்கிறது; அந்த அறியாமையால் பாவிப்பது எப்படி ?

மூன்று :

இன்னதென்று அறியப்படாத நிலையில் (அநிர்வசனம்) பாவிப்பதென்றால், என்னவென்று பாவிப்பது ?

நான்கு :

பாவனைக்கு எய்தாத ஒன்றை எய்தியதாக எண்ணிப் பாவிப்பதென்றால், உண்மையைப் பாவித்தல் ஆகாது; வெறும் பாவனையாய் 'போலிப் பாவனையாய்' முடியும்.

ஆதலால், இங்கே கூறப்படும் பாவனை, இந்த நான்கினும் வேறு உண்மைப் பொருளைத் தேனிப்பதாகும்; சிவசத்தைப் பாவிப்பதாகும். அஃது, இன்னதென்று அறியப்பட்ட பொருள். கருணையினால் சிவம் விரைந்து உதவத் தானே வருகிறது; தேனிப்போர் அதனைத் தொடரவும் சிக்கெனப் பற்றவும் பயன் பெறவும் வாய்ப்புண்டு.

உயிர் உணர்வாகிய அன்பினால் அருளைப் பெற்றுச் சிவத்தைப் பாவிப்பதுதான் அது. பாவிக்கும் அன்பு, மன வாக்குக் காயங்களிலும் ஊடுருவிச் செயல்பட்டுக் கொண்டிருக்கும். பாவிக்கப்படும் சிவமும் மனவாக்குக் காயங்களில் ஊடுருவி இயல்பாகவே விளங்கி, அன்புணர்வோடு ஒன்றி உதவி செய்து கொண்டிருக்கும். ஆண்டவன் திருவருள், உயிரின் பக்குவ நிலையை நோக்கிப் பதிஞானமாய் ஒன்றி, மிக விரைவாய் ஈடுபடும். அதனால், பாவனை என்னும் தேனிப்புக்குச் சிவம் எட்டும் நிலையில் உள்ளது. அது பாழாதல் இல்லை.

சிவஞானத்தால் உணர்ந்து பாவிக்கும் வகையை இந்நூலின் ஒன்பதாம் நூற்பா நன்கு விளக்கும். இங்கே அசட்டுப் பாவனைகளை மட்டும் பிரித்துக் கூறுகிறது. இதற்கும் ஒரு செய்யுள் :

*"பாவகமேல்தான் அசத்தாம், பாவநா தீதமெனில்*
*பாவகமாம், அன்றென்னில் பாழதுவாம்,—பாவகத்தைப்*
*பாவித்தல் தான்என்னில் பாவகமாம், தன்அருளால்*
*பாவிப் பதுபரம், இல் பாழ்."*

பொருள்:

பாவகமேல் தான் அசத்தாம் – மனத்தால் பாவிப்பதென்ருல் பாவிக்கப்பட்டது அசத்துப் பொருளாகும்; பாவநாதீதம் எனில் பாவகமாம் – மனம் முதலிய கருவிகளை நீங்கிப் பாவித்தலால் பாவனை கடந்ததென்ருல், கருவிகளால் அறிவு பெறக்கூடாத அந் நிலையில் அது வெறும் பாவனையாகும்; அன்று என்னில் பாழது ஆம் – பாவனைப் பொருள் இன்னதென்று கூறவொண்ணுதது (அநிர்வசனம்) என்ருல், அது வெறும் பாழைப் பாதித்தலாம்; பாவகத்தைப் பாவித்தல்தான் என்னில் பாவகமாம் – பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவனையாய் பாவித்தலே என்ருல், பொய்ப் பாவனையாம் (இங்ஙனம் நான்கு வகையான பாவனைகளும் பயன் செய்வதில்லை); தன்னருளால் பாவிப்பது பரம் – இறைவன் அருளால் பாவிப்பதுதான் சிவசத்தைப் பாவிப்பதாகும்; பாழ் இல் – அது வெறும் பாழ் அன்று.

முதல் வரியில் தான் என்பது, பாவிக்கப்படும் பொருள். மூன்ருவது வரியில் பாவித்தல்தான் என்பது பாவித்தலே என்னும் பொருளில் வந்தது. வெறும் பாவகமாதலின் பொய்ப் பாவனை எனப்பட்டது; பாவகத்தைப் பாவித்தல் - பாவகத்தைச் செய்தல்.

உயிர்களின் பாவனை முயற்சியால் மட்டும் சிவசத்து எட்டி வருவதன்று ; இறைவன் தன் கருணையினுல் எட்டி வருகிருன் ; அக் கருணையைக் கொண்டு பாவிப்பதில் பயன் உண்டு. அதனுலேதான் 'தன் அருளால் பாவிப்பது பரம்' என்று கடைசியில் வந்தது.

அருளாலன்றி அப் பொருள் எட்டாது; எட்டி வருமிடத்தும் தன் அருளில் அது நுட்பமாய்க் கலந்திருக்கும். சிவத்தை நோக்க உயிர் தூலமாய் இருக்கும். மற்ற உலகப் பொருள்கள் இன்னும் தூலமாய் இருக்கும். இக் கலப்புகள், தூல நுட்ப இரண்டன்மைக் (அத்துவிதம்) கலப்புகள்! வீடுபேற்றுக் காலத்திலும் சிவத்தோடு உயிர் சமமாவதில்லை.

இவ் வுண்மைகளையெல்லாம் விளக்கிச் 'சிவசமவாதி'களை மறுப்பதற்கும் ஒரு செய்யுள் வருகிறது.

*' அறிய இரண்டல்லன், ஆங்கறிவு தன்னுல்*
*அறியப்படான், அறிவி னுள்ளான்,—அறிவுக்குக்*
*காட்டாகி நின்ருனைக் 'கண்ணறியா மெய்'யென்னக்*
*காட்டா தறிவறிந்து கண்டு.''*

இதன் பொருள்:

அறிய இரண்டல்லன் - உயிர் தன்னறிவினால் அறிவதற்கு இறைவன் அதன் உணர்விற்கு இரண்டாவதாக வேறு அல்லன்; ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் - அந் நிலையில் இறைவன், அறிவினால் ஆராய்ந்து அறியப்படக் கூடியவன் அல்லன்; அறிவின் உள்ளான் - தூல நுட்ப முறையில் உயிரின் உணர்வுக்குள் இறைவன் இருக்கிறான். (ஒன்றித்து அவனை அன்பினால் தேனித்து உணரவேண்டும்.) மெய்யறியாக் கண் என்ன - உள் பொருளாகிய உயிரை அறியமாட்டாத கண் என்னும்படி; அறிவுக்குக் காட்டாகி நின்றானை - உயிர் அறிவு பெறுவதற்கு உதவியாய் நின்ற இறைவனையும், அறிவு கண்டறிந்து காட்டாது - அருளாலன்றி உயிருணர்வு தன் பாவனை முயற்சியால் தானே கண்டுணர்ந்து காட்டிவிடாது.

'கண் அறியா மெய்' என்று இச் செய்யுளில் ஓர் எடுத்துக் காட்டு வந்தது. உயிரறிவால் கண் முதலிய பொறிகள் அறிவு விளங்துகின்றன; ஆயினுந் தனக்கு உதவியாயிருக்கும் அந்த உயிராகிய முதலைக் கண் அறிவதில்லை; அதனால் 'கண் அறியா மெய்' என உயிர் குறிக்கப்பட்டது. அதுபோலவே உயிரும் தனக்கு உதவும் இறைவனை அறிவதில்லை; இவ் வுவமமும் பொருளும் வெண்பாவின் பிற்பகுதியில் வந்தன.

மெய் என்றது, உள்பொருளாகிய உயிரை; அப்படி உணர்வின் உள்ளே உயிர்க்குயிராய் இறைவன் ஒன்றிக் கலந்திருக்கிறான்; இரண்டாவதாகத் தனியாக இல்லை. இக் கருத்து வெண்பாவின் முற்பகுதியில் வந்தது. ஆதலால், பிறவிக் காலத்திலும் வீடுபேற்றுக் காலத்திலும் இறைவனும் உயிரும் சமமாவதில்லை. ஒரு பொருளாய் ஒன்றி இருக்கின்றன என்பதாலேயே சமம் என்று சொல்லிவிடுவதற்கில்லை. பிறவிக் காலத்தில் உயிர்கள் பசுபாச ஞானங்களால் அசத்துப் பொருள்களை அறிந்து வந்தாலும் அந்நிலையிலும் இறைவன் அவற்றோடு ஒன்றியே அறிவித்து வருகிறான். சிவஞானம் பெற்று உயிர்கள் வீடுபேற்றிற் சிறந்திருந்தாலும் இறைவன் அவ்வுயிர்களோடு ஒன்றியே இருக்கிறான். பிறவிக் காலத்தில் ஒன்றியிருப்பது மலங்களின் மூலம் சிற்றின்பம் தருவது; வெறுந் தொழில் முறை; இறைவனது பொதுநிலை; பொது இலக்கணம்! வீடு பேற்றுக்காலத்தில் ஒன்றியிருப்பது, தானே பேரின்பம் வழங்கும் நிலை; எட்டாப் பேராற்றல் உடையவனாயிருந்தும் அருளால் எட்டி வரும் சிறப்பு நிலை; பெருமானுக்கு இது சிறப்பிலக்கணம்!

'சிவாத்துவிதிகள்' என்னும் ஒரு சாரார், 'வீடுபேற்றிற் சிவத்தோடு ஒன்றும்போது உயிர்களும் சிவமும் ஒன்றாய்விடுமே; அப்போது 'உணர்வது உயிர், உணரப்படுவது சிவம்' என்னும் வேற்றுமை ஏது என்று நினைப்பர். 'சுத்த சைவர்' என்பவரும் இங்ஙனம் எண்ணுவதுண்டு.

அவர்கள் கருத்துக்களை ஒப்புக்கொள்ளாமல், ஒரு செய்யுள் வருகிறது:

''அதுவென்னும் ஒன்றன் றதுவன்றி, வேறே
அதுவென் றறிபறிவு முண்டே;—அதுவென்
றறிய இரண்டல்லன் அங்கறிவுள் நிற்றல்,
அறியுமறி வேசிவமு மாம்.''

பொருள் :

அது என்னும் ஒன்று அன்று - மாயாவாதிகள் கூறும் அது என்னும் 'அநிர்வசனப்' பொருள் அன்று கடவுள்; அது அன்றி- அக் கடவுட் பொருள் அல்லாமல்; வேறே அது என்று அறி அறிவும் உண்டே - வேருக அது சிவசத்தென்று உணரும் உயிரும் உண்டு; அது என்று அறிய இரண்டு அல்லன் அங்கு அறிவுள் நிற்றல் - அந்நிலையில், உயிரறிவின் உள்ளே தன் உணர்வின்றிக் கடவுள் உணரப்படுதலால் அது என்று தனித் தறிய வேறு அல்லனாய் ஒன்றியிருக்கிறான்; அறியும் அறிவே சிவமும் ஆம் - அதனால், உணரும் உயிர்களும் சிவம் என்றே சொல்லப்படுகின்றன. (ஆனால், அவ்வுயிர்களுக்கும் வேருகப் பேராற்றல் உள்ள சிவசத்தாய்ச் 'சிவம்' என்பதும் உண்டு.)

வீடுபேற்றில் இங்ஙனம் 'உணரும் உயிர், உணரப்படும் சிவம்' என வேறு வேறு உள் பொருள்களாய்ச் 'சதசத்தும்' 'சிவசத்தும்' என இரண்டு உண்டு. மலமும் நிலையான ஓர் உள்பொருளாதலால் வீடுபேற்றில் 'அசத்தாய்த்' தம் ஆற்றல் கள் மடங்கி, உயிரின் வீடுபேற்றுப் பேரின்பத்துக்கு ஒத்து உதவிசெய்துகொண் டிருக்கும்.

''முத்திதனில் மூன்று முதலும் மொழியக் கேள்
சுத்தஅணு போகத்தைத் துய்த்தல் அணு—மெத்தவே
இன்பங்கொ டுத்தல் இறை, இத்தைவிளை வித்தல்மலம்,
அன்புடனே கண்டுகொள்அப் பா''

என்னும் 'உண்மை விளக்கச்' செய்யுள் இவ்வியல்பை இனிது விளக்கும்.

(தொடரும்)

# பழந்தமிழில் மக்கட்பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

(முன் இதழ்த் தொடர்ச்சி)

## 7. அஞ்சில் அஞ்சியார்

அஞ்சில் அஞ்சியார் நற்றிணையில் 90 ஆம் பாடலைப் பாடியவர். அஞ்சில் என்னும் ஊரிற் பிறந்ததால் அஞ்சில் அஞ்சியார் என அழைக்கப்பட்டார். அஞ்சி என்பது இவர் பெயர். ஆர் உயர்வுப்பன்மையீறு. 'இல்' ஈறு பெற்ற ஊர்கள் பலவுள்ளன. அரிசில், பொருந்தில், கள்ளில், அன்பில், திருப்பாச்சில், செந்தில் என்பவற்றைச் சான்றாகக் காட்டலாம். 'இல்' ஈறு பெற்ற வூர்கள் அவ்வீறு கெட்டு ஊர் என்னும் இறுதி பெறுவதும் உண்டு. திருச்செந்தில் திருச்செந்தூர் எனவும், மயிலார்ப்பில் மயிலாப்பூர் எனவும் இடைமருதில் திருவிடைமருதூர் எனவும் மணவில் மணவூர் எனவும் வழங்குதலைக் காண்க. இதன்படி அஞ்சில் என்னும் ஊர் இக் காலத்து அஞ்சூர் எனத் திரிந்துள்ளது. தருமபுரி மாவட்டத்திலும் அஞ்சூர் உள்ளது.

அஞ்சியார் என்பது ஆண்பாற் பெயர். படைத்துறைத் தலைவர், குறுநிலமன்னர் என்னும் பொருள்களில் அஞ்சி என்னுஞ் சொல் வழக்குப் பெற்றிருத்தலால் இதனையறியலாம். வையாபுரிப்பிள்ளையவர்கள் அஞ்சிலஞ்சியார் என்பது ஊரொடு சேர்ந்த பெண்பாற் பெயர் எனக் குறித்திருப்பது ஏற்புடைத்தன்று.

## 8. அஞ்சிலாந்தையார்

அஞ்சிலாந்தையார் குறுந்தொகையில் 294 ஆம் பாடலையும் நற்றிணையில் 233 ஆம் பாடலையும் பாடியுள்ளார். இவரும் அஞ்சில் என்னும் ஊரிற் பிறந்தவர். அழும்பில் என்னும் ஊர் கடைக்கழகக் காலத்தில் சோணாட்டிலொன்றும் சேரநாட்டிலொன்றும் இருந்தது போன்று அஞ்சில் என்னும் ஊரும் பல இருந்திருக்கக் கூடுமாதலின் அஞ்சிலாந்தையாரின் ஊர் எங்கிருந்தது என வரையறுத்தல் இயலாது.

ஆந்தை என்னும் பெயரை ஆதன்+தந்தை என்னும் கூட்டுச் சொல்லின் மரூஉமுடிபு என இதுகாறும் கூறி வருகின்றனர்.

புகழ்பெற்ற ஆதன் என்னும் மகனால் நாடறியப்பட்ட தந்தையாக எங்கோ ஒரிருவர் அருகியிருத்தல் சாலுமேயன்றிப் பலரிருந்திருக்க வியலாது. அஞ்சிலாந்தையார், சிறைக்குடி

ஆந்தையார், ஓதலாந்தையார், பிசிராந்தையார் போன்ற பலரும் ஆதனின் தந்தையர் என்பது எவ்வாறு பொருந்தும்? கன்னட நாட்டில் கிடைத்த தமிழ்க் கல்வெட்டுக்களிலும் ஆந்தை யெனும் பெயர் கொண்டோர் காணப்படுகின்றனர்.

மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரர் எனத் தந்தை பெயரை முற்கூறி மகன் பெயரைப் பிற்கூறுவதல்லது நக்கீரர் தந்தையார் கணக்காயனார் என்பது போன்ற பெயராட்சிகளைக் கேட்கக்கூடவில்லை. மற்றும் ஆதனின் தந்தைக்கு இயற்பெயரே இல்லையா? மகன் பலராலும் அறியப்படும் காலம் வரை தந்தை எவராலும் அறியப்படாமலே வளர்ந்தவரா? ஆதன் புலமை பெற்றுக் கவிபாடத் தொடங்கியபின் ஆதன்தந்தை கல்வி கற்றுப் புலமை பெற்றாரா? இன்னோரன்ன வினாக்கள் எழுவதால், ஆந்தை பூந்தை என்னும் பெயர்களை முறையே ஆதன் தந்தையார், பூதன் தந்தையார் என்பவற்றின் மரூஉமுடிபுகள் என்று எடுத்துக்காட்டு தரும் இலக்கண ஆசிரியர்களின் கூற்றுக்கள் அருகிய வழக்கோ என்றும் தோன்றுகிறது. ஆதலின் ஆந்தையார் எனவரும் பெயர்களை இயற்பெயராகவும் சிறப்புப் பெயராகவும் கொள்வதே பொருந்தும். ஆந்தை இயற் பெயராகிய விளக்கத்தை ஆந்தை என்னும் தலைப்பின் கீழ்க் காண்க. அஞ்சிலாந்தையார் என்பது ஆண்பாற் பெயர்.

9. அடைநெடுங்கல்வியார்

அடைநெடுங் கல்வியார் புறநானூற்றில் 283, 344, 345 ஆம் பாடல்களைப் பாடியுள்ளார். தும்பை பாடாண் துறையில் கோசர்களை, 'வலம்புரிகோசர் அவைக்களத்தானும்' எனப் புகழ்ந்து பாடியுள்ளார். இவருடைய ஆழ்ந்த புலமையையும் பரந்த கல்வியையும் பாராட்டு முகத்தான் அடைநெடுங்கல்வி யார் என்னும் சிறப்புப் பெயரளிக்கப்பட்டவராதல் வேண்டும். சிறப்புப் பெயர் அளிக்கப்பட்டவர்க்கு இயற்பெயர் மறைய, சிறப்புப் பெயரே நின்று நிலவுவது இயல்பு. கணிமேதாவி யார்க்கு இயற்பெயர் மறைய, சிறப்புப் பெயரே நிலைத்து வழங்கியமை அறிதற்பாலது.

கல்வியிலும் கேள்வியிலும் சிறந்தாரைப் பாராட்டிச் சிறப் பித்தல் பழங்கால மரபு. நெடுநுண் கேள்வி அந்துவன் என்று கேள்வியறிவானும், தொலையாக்கற்ப எனக் கல்வியறிவானும் பதிற்றுப்பத்துள் சேரமன்னர் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். செல்வம், ஆட்சி, வலிமை ஆகியவற்றான் சிறப்பிக்கப்படு வதினும் கல்வி கேள்விகளால் பெற்ற மேம்பாடு தரும் சிறப்புப் பெயரைத் தமிழர் பெரிதும் விரும்பினர் என்பதற்கு இவை சான்

ருகின்றன. பொருட்செல்வத்தினும் கல்விச் செல்வத்தினைப் பெரிதாக மதித்த தமிழர் பண்பாட்டின் விளக்கமாக இத்தகைய பெயர்கள் விளங்குகின்றன.

**10. அண்டர்மகன் குறுவழுதியார்**

அண்டர்மகன் குறுவழுதியார் அகம் - 156, 228, குறுந் - 345, புறம் - 346 ஆம் பாடல்களைப் பாடியுள்ளார். அண்டர் என்னும் பெயர் பதிற்றுப்பத்திலும் (88-9) அகநானூற்றிலும் (59-5) குறிப்பிடப்படுகிறது. அண்டர்மகன் குறுவழுதியாரை அண்டரின் மகன் எனல் பொருந்தாது. அண்டர் பலர்பாற் குறித்த சொல். ஒருவன் பலருக்கு மகனுமாறு யாங்ஙனம்? மகனாயின் அண்டனார் மகனார் குறுவழுதியார் என்றிருத்தல் வேண்டும். ஆதலின் அண்டர்மகன் என்பதற்கு அக் காலத்தில் அண்டர் தலைவன் எனப் பொருளிருந்திருத்தல் வேண்டும். தலைமகன் என்னுஞ் சொல் இலக்கிய வழக்கில் மூத்தமகன் எனப் பொருள்தராது. தலைமையான ஆண்மகன், தோன்றல் எனப் பொருள்படுதல் காண்க. மகன் - ஆண், சிறந்தோன், வீரன், கணவன் என்னும் பொருள்களில் இலக்கிய வழக்குப் பெற்றுள்ளது.

மகன்—ஆண்

"*செய்ந்நன்றி கொன்ற மகற்கு*"　　(குறள் - *110*)

மகன்—சிறந்தோன்

"*நூல்கற்ற மகன்றுணையா நல்ல கொளல்*"　　(நாலடி - *136*)

மகன்—வீரன்

"*வேந்தன் மனம்போல வந்தமகன்*"　　(பு. வெ. மா. *2, 5*)

மகன்—கணவன்

"*வினக்கிவன் மகனைத் தோன்றிய தூஉம்*"　　(மணிமே, *21-29*)

அண்டரின் மகன் எனப் பொருள் கொள்வதற்கு மற்றொரு தடையாக இருப்பது தந்தை முறைப் பெயரையடுத்து வரும் மகன் பெயர்கள் மகனார் என ஆர் ஈறு பெற்றிருப்பதாகும். மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார், மருதங்கிழார் மகனார் சொகுத்தனார், மாக்காயனார் மகனார் கணிமேதாவியார், கோளியூர்கிழார் மகனார் செழியனார், ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார், ஆவூர் கிழார் மகனார் கண்ணனார், உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார், செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார், கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேர கோவனார் என்னும் பெயர்களைக்

காண்க. புலவர்கள் தம்பெயரைத் தாமே குறிப்பிட நேரும் போது மட்டும் அவையடக்கமாக அல்லது தன்னடக்கமாக ஒக்கூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன், பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன் என இயற்பெயரிலும் மகன் பெயரிலும் 'ஆர்' ஈறு இன்றிக் குறித்துக் கொண்டனர். அண்டர்மகன் குறுவழுதி யாருக்கு மகன் என்பதில் ஆர் ஈறு சேராமல் வழுதிக்கு மட்டும் உயர்வுப்பன்மையீறு சேர்ந்திருப்பது காண்க.

அண்டர் என்பார் ஆட்டிடையரும் ஆனிரைமேய்ப்போரு மாவர்.

''*அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினர்*'' (திவ். பெரியா. 1, 1, 5)

என இடைக்காலத்தும் அண்டர் அப் பெயரான் அறியப்பட்டனர். கன்னட நாட்டில் 'அண்டரிகெ' என்பதோர் இளமகளிரின் விளையாட்டு. இவ் விளையாட்டில்,

''அண்டருக்குப் பண்டிகை
எண்கால் விளக்கிலே
எண்ணெய் விடடி''

என்னும் பாடலைக் குற்றிளையார் (இளமகளிர்) பாடுகின்றனர். இதனால் கன்னட நாட்டிலும் அண்டர் வாழ்ந்தமை யறியப் படும். கன்னட நாட்டில் அண்டிகெ என்னும் ஊரும் உள்ளது. அண்டய்யன் என்பவன் கன்னடத்தில் வடசொல்விரவாமல் காவியம் பாடிய புலவன். வடபுலத்து யாதவரும் போசரும் அண்டரின் இனத்தவரே. யதுவின் மைந்தனொருவனுக்கு அஞ்சிகன் எனும் சேரக்கிளைப் பெயரிருந்தது.

இடையரும் ஆயருமாகிய அண்டர், கால்நடைகளைக் காக்குந் தொழிலான் ஒன்றுபட்டுக் கெழுமி (அண்டி) ஓரிடத்து வாழ்ந்ததால் அண்டர் எனப்பட்டனர். தெலுங்கில் அண்ட எனுஞ்சொல் குழு என்றும் புகலிடம் என்றும் பொருள்படுகிறது.

வழுதியென்பது பாண்டியர்க்கே யுரிய குடிப்பெயரும் சிறப்புப் பெயருமாகும். பாண்டிய ஆட்சிக்கு உட்பட்ட அண்டரின் நிலப்பகுதிக்கு அரசச் சார்பாளராக இருந்தாண்ட பாண்டிய நாட்டு இளவரசனாக அண்டர் மகன் குறுவழுதி இருந்திருத்தல் கூடும். அண்டருக்குப் பெருமகன் (தலைவன்) ஆன குறுவழுதி என இது பொருள்படும். குறுவழுதி என்பதும் சிறிய அதிகாரி எனும் பொருளினதாதல் வேண்டும். இடைக்காலச் சோழர் ஆட்சியில் அவர் வென்ற பிற மண்டலங்களில் அரசச் சார்பாளராகச் சோழப் பெருந்தரம், சோழச் சிறுந்தரம் என்னும் அதிகாரிகளமர்த்தப் பட்டிருந்தமை கல்வெட்டுக்களால் புலனாகின்றது.

11. அண்டிரன்

அண்டிரனின் பெயர் நற். 23-7, புறம் 129-5, 131-2, 241-2 ஆகிய பாடல்களில் குறிப்பிடப்படுகிறது. கடைக்கழக காலத்தில் ஆய் அண்டிரன் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகப் பாராட்டப்பட்டான்.

"மழைக்கணஞ் சேக்கும் மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்"

என இவன் வாட்போர்த்திறனும் புகழப்படுகிறது. தெலுங்கில் மற்போரில் வல்ல மறவனையும் வலிமை சான்றவனையும் அண்டிரண்டு என்பர். உடல் வலிமை சான்ற இளைஞனைத் துளுமொழியில் ஆண்சேவு என்பர். கன்னடத்தில் அண்மு, அண்ம எனுஞ் சொற்கள் ஆண்மையையும் வீரத்தையும் குறிக்கின்றன. வடபுலத்துத் திரவிடமொழிகளான பெங்கோ, மண்டா மொழிகளில் அண்ட்ரென் எனுஞ் சொல் வலிமைசான்ற ஆண்மகனைக் குறிக்கிறது.

ஆண் + திறம்—அண்டிரம்—அண்டிரன் எனத் திரிந்ததாகவும் இதுவே மேலையாரிய மொழிகளுள் ஒன்றான கிரேக்க மொழியில் இதே பொருளில், Anir, Andros என வழங்குவதாகவும் மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் கூறுகிறார். எனவே, சிறந்த வீரனுக்கு அண்டிரன் என்னும் பட்டப்பெயர் இடப்பட்டிருக்கலாம் என்றும், அவன் மரபினர் அண்டிரன் என்னும் குடிப்பெயரினராயினர் என்றும் தெளியலாம். தெலுங்கிலும் கன்னடத்திலும் ஆந்திரர் என்னும் பெயர்க்கரணியத்தைக் குறித்து எழுதிய வரலாற்றாசிரியர் பலரும் தமிழிலுள்ள அண்டிரன் என்னுஞ் சொல்லோடு தொடர்புபடுத்திக் காட்டியுள்ளனர்.

12. அத்தி

சேரநாட்டு இளவரசன் ஆட்டனத்தி அத்தியென்னும் இயற்பெயரினன். அத்திகோசத்தார் எனும் பெயர் தொல்காப்பிய உரையில் (தொல். சொல்-167) குறிப்பிடப்படுகிறது. அத்திகாடு, அத்திகாண்டு என்று தெலுங்கரும், அத்தியண்ணன் என்று தமிழரும் பெயரிட்டுக் கொள்வது இன்றும் வழக்கமாக வுள்ளது.

அத்தியென்பான் திங்கள் மரபில் (பாண்டியர் மரபு) தோன்றியவன் என்றும் அத்தினாபுரியை நிறுவியவன் என்றும் பாரதத்தில் (பாரத. குருதல. 28) குறிக்கப்படுகிறான்.

அத்து என்னும் சொல் செறிவு நெருக்கம் என்று பொருள் படுவது. நெருங்கக் காய்காய்க்கும் மரம் அத்திமரம் எனப்படுகிறது. தமிழில் சாரியையாக வழங்கும் அத்து எனும் இடைச்சொல் மலையாளத்தில் மழையத்து—மழையில், வெயிலத்து—வெயிலில் என இடப்பொருளுருபாக வழங்குகிறது. ஐந்திரவிட மொழிகளுள் ஒன்ருன மராத்தி மொழியில் இடப்பொருள் குறித்த ஏழனுருபாக அத்து இருப்பது அறிதற்பாலது.

இணைதல் அல்லது நெருங்கற்பொருளில் 'அத்தித்தைத் தான்' என்னும் உலகவழக்கும், சார்தல் பொருளில் 'என் தோளை அத்திக்கொண்டுவா' என்னும் உலகவழக்கும், அத்துச் சொல் நெருங்குதல் பொருளில் வழக்கூன்றியிருப்பதற்கும், சாரியையாகவும், இடப்பொருளுருபாகவும் வழங்குதற்கும் தகுதியுடையதாதலை விளக்கும்.

எப்பொழுதும் அண்மையில் துணையாக இருப்பான் என்னும் பொருளில் பெற்ருேர் தம் பிள்ளைக்கு அத்தி எனப் பெயரிடுவது பண்டையோர் வழக்காதல் வேண்டும். தெலுங்கில் அத்திகன் (அத்திகாடு) என்ருல் அருகிலிருப்பவன் என்று பொருள்.

கன்னடநாட்டில் அத்திகேரி (அத்திச்சேரி), அத்திநெல்வாகில் (அத்திநெல்வாயில்) என்னும் ஊர்கள் உள்ளன. அத்தியய்யன், அத்தியவ்வை என்னும் பெயர் பூண்டவரும் கன்னட நாட்டிலுளர். கன்னட நாட்டுச் செல்வக்குடியிற் பிறந்த அத்தியப்பெ (அத்தியவ்வை-அத்திக்குடியில் பிறந்தவள்) என்பவள், கோவில்களுக்கு நந்தாவிளக்கெரிக்கப் பொன்னும் பொருளும் தருவதினும் அறநூல்களை ஆயிரக்கணக்கில் படியெடுத்துக் கற்ருர்க்கு இலவயமாக அளிப்பது மிகச்சிறந்த அறம் எனக் கேள்வியுற்று, பெரும்பொருட் செலவு செய்து, கன்னடத்திலுள்ள அறநூல்களை ஆயிரக்கணக்கில் படியெடுத்துக் கற்ருர் பலர்க்கும் வழங்கினுள் என்று கன்னட நூல்கள் கூறுகின்றன.

அத்தி இயற்பெயராகவிருந்து பின் சிறப்புப்பெயராகி நாளடைவில் குடிப்பெயராகவும் ஏனைத் திரவிட நிலப்பகுதிகளில் நிலவியது என்பது அத்திக்குடியிற் பிறந்த 'அத்தியப்பெ'யின் வரலாற்ருல் தெரிகிறது. அரசனுக்கு உடன் கூட்டத்து அதிகாரியாக அல்லது நேர்முகச் செயலராக (personel Secretary) இருந்த அதிகாரிக்கும் அத்தியெனும் சிறப்புப்பெயர் வழங்கியிருக்கலாம்.

———

# மொழியும் ஒலியும்

[புலவர். பொ. முனியப்பன், கூகலூர்]

மொழி விழியினும் முதன்மையானது. ஒருவரின் கண், கண்ணாக மதிக்கப்படுவதே அவர் மொழியை, மொழிவழிப் பிற கல்வியைக் கற்றபின் தான். கல்லாதார் கண்ணெல்லாம் புண்ணே என்பது வள்ளுவர் வாய்மொழியன்றோ? மொழியின் துணையின்றி எவரும் நாகரிகமாயும், வளமாயும் வாழமுடியாது. முன்னோர் அரும்பாடுபட்டு ஈட்டிய அறிவுச் செல்வமெல்லாம் மொழிவாயிலாகவே போற்றிக் காக்கப் பெறுகின்றன.

சின்னஞ்சிறு பொருள்களையும் பொன்னே போல் போற்றும் நாம், அன்று முதல் இன்றுவரை கணக்கற்ற தலைமுறைகளாய்த் தொடர்ந்தும் திரண்டும் வரும் அரும் பெரும் செல்வத் திரட்டாகிய மொழியை, எத்துணைக் கவனமாகவும் கண்ணியமாகவும் பேணுதல் வேண்டும்! மொழியைப் பேணும் முறையையும் நம் முன்னோர் செப்பமாக வரையறுத்துள்ளனர். அவ் வரையறையை மீற முனையும் இக் கால நிலையையும், அதனைத் தவிர்க்க வேண்டிய கட்டாயத்தையும் காட்டவே இக் கட்டுரை எழுகின்றது.

எல்லா மொழிகளும் ஒலியென்றும் எழுத்தென்றும் இரு வகைப்படும். உலகில் எழுத்தில்லா மொழிகளும் உண்டு. ஒலி செவிக்கு. உருவம் கொள்ளும் எழுத்து கண்ணுக்கு. ஒலி ஒன்றிற்கு எழுத்து ஒன்று என அமைந்தது தமிழ்மொழி. இன்று உலகமொழியாய் விளங்கும் ஆங்கிலமும், புகழ்பெற்ற வேறுசில மொழிகளும் இத்தகையன அல்ல.

ஆங்கில எழுத்துக்களைத் தெரிந்துகொண்ட ஒருவரால் எந்த ஆங்கிலச் சொல்லையும் சரியாக ஒலித்துவிட முடியாது. ஆயின் தமிழில் அவ்வாறன்று. தமிழ் எழுத்துக்களைத் தெரிந்து கொண்ட எவரும் தமிழ்மொழியைத் தடையில்லாமல் எவருடைய உதவியின்றியும் படிக்கலாம். இதுவே தமிழில் உள்ள சிறப்பான ஒலிப்பு முறை.

இத்தகைய சிறப்பான ஒலிப்பு முறையைக் கொண்டுள்ள தமிழில் எல்லா ஒலிகளும், அவ்வெல்லா ஒலிகளுக்குரிய எழுத்துக்களும் இல்லை என்பது உண்மை. ஆயின், இதனை உரத்து உரைப்பவர் உலகில் உள்ள எந்த மொழியும் எல்லா ஒலிகளையும் உடையது அன்று என்னும் மாபெரும் உண்மையை மறைத்திட முயல்கின்றனர்.

உலகில் உள்ள ஒலிகளுக்கெல்லாம் ஒவ்வொரு மொழியி லும் எழுத்துக்கள் இருத்தல் வேண்டும் என்று கொண்டால், எந்தமொழியிலும் ஐநூற்றிற்குக் (500) குறையாத எழுத்துக்கள் இருக்க நேரும். ஐநூறும், ஐநூறுக்கு மேற்பட்ட எழுத்துக்களை உடைய மொழிகளிலும் கூட எல்லா ஒலிகளும் இல்லை என்ற உண்மையை இன்று மொழியியலார் கண்டுள்ளனர்.

ஒரு மொழியில் இயற்கையாக அமைந்த ஒலிகள் எவையோ அவற்றிற்கு மட்டும் எழுத்துக்கள் இருப்பதுதான் அம் மொழிக்கு நலம் பயக்கும். உலகில் எந்த மொழியிலும் எல்லா ஒலிகளும் இருக்க இயலாது.

தமிழ், உலகின் முதல் தாய்மொழியாயும் பழங்காலம் முதலே பண்பட்ட மொழியாயும், இரு வழக்கிலும் இன்றும் தன் தனித்தன்மையுடன் சிறந்து விளங்குகின்றது. தொல்பழஞ் சிறப்பும், நனிமிகு புதுப்பொலிவும் தமிழ்மொழி போலப் பெற்ற மொழி உலகில் எதுவும் இல்லை என்பதை இன்றைய மொழி ஆய்வு தென்னத் தெளிவாய்க் காட்டுகிறது.

இத்தகு சிறப்புக்கள் எல்லாம் தம் மொழிக்கோ, அல்லது தாம் விரும்பும் மொழிக்கோ இல்லாமை கண்டவர் கொண்ட காழ்ப்புணர்வே, அவர்களைத் தமிழைச் சிதைக்குமாறு தூண்டி யது என்பதை வரலாறு உணர்த்துகிறது. அச் சிதைப்பிற்குத் துணையாகப் பிற ஒலிகளைத் தமிழில் புகுத்துகின்றனர்.

தமிழிற் கலக்கப்படும் 'ஜ, ஷ, ஸ, ஹ' போன்ற ஒலிகள் தேவையின் பொருட்டு வந்தவையல்ல. (இவ் வொலிகளும், இக் கிரந்த எழுத்துக்களும் தனக்கென எழுத்தில்லாச் சமற் கிருதத்தை எழுதத் தென்னாட்டார் அமைத்துக்கொண்டதே யாகும். (வடநாட்டார் சமற்கிருதத்தை எழுத அமைத்துக் கொண்ட எழுத்து முறை தேவநாகரியாகும்.) தமிழ், யாம் விரும்பும் அல்லது யாம் போற்றும் மொழியின் துணையின்றி இயங்காது என்பதைக் காட்டவிரும்பிய இறுமாப்பினரால் தமிழில் புகுத்தப்பட்டவையே இவை.

கற்றவர் என்று தம்மைக் கரைந்து கூவிக்கொள்ளும் சிலரால் இன்று இவ்வொலிகள் தமிழில் புகுத்திக் காக்கப்படு கின்றன. பிற ஒலி எழுத்துக்களைப் பயன்படுத்துவதில் பெரும் பான்மையோர் இத்தகையோர் வலையில் அறியாது விழ்ந்ததும், மொழியியல்பறியாமை என்னும் இயல்பான சிறு குறை களுக்கு உரியவர்களே அன்றி பழிப்புக்கு உரியவர்கள் அல்லர் என்பதை இவ்விடத்தில் குறிப்பிடல் முறையாகும்.

ஒரு மொழியைச் சிதைத்து உருமாற்ற ஒலிக்கலப்பே சிறந்த வழி என்பதற்கு அன்று தமிழ் நிலமாய் இருந்த பகுதிகள் இன்று தெலுங்காய், கன்னடமாய், மலையாளமாய்த் திகழ்வதே தக்க சான்றாகும்.

பிறமொழிகளுக்குரிய ஒலிகளைத் தமிழில் பயன்படுத்தும் போது எம் முறையைக் கையாளவேண்டும் என்பதை அன்றே தொல்காப்பியர் மிகத் தெளிவாக வரையறுத்துள்ளார். தமிழில் இல்லாத பிற ஒலிகளைத் தமிழ் ஒலிக்கு ஏற்பத் திரித்துத்தான் வழங்க வேண்டும் என்பது தொல்காப்பியர் இட்ட நெறி. தொல்காப்பியம் மிகப் பழைமையான நூல். ஆகையினால் அது காட்டிய நெறிகளைக் காலத்திற் கேற்ப மாற்றிக் கொள்ளலாம் என்று சிலர் மொழியியல்பறியாது மொழிகின்றனர்.

காலத்திற்கேற்ற மாற்றம் மேற்போக்கான சில நெறி களில் அமைத்துக் கொள்ளவதில் தவறில்லை. அதனை எவரும் தவறென்று உரையார். ஆயின், ஒரு மொழியின் ஒலிப்புமுறை மேற்போக்கானதன்று. மொழியின் அடிப்படைக் கூறாகவும், உயிர்க்கூறாகவும் இருப்பதே ஒலிப்புதான். அதனை மாற்றுவது மொழியையே மாற்றுவதற்கு (சிதைப்பதற்கு) ஒப்பாகும். அடிப் படையைத் தகர்ப்பது அனைத்தையும் தகர்ப்பதாகும் என்பது அறிவுபெருச் சிறுவரும் அறிந்த செய்தியன்றோ!

மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே நம் முன்னோர் இட்ட இவ்வடிப்படை நெறியை உலகில் பிற மொழியினர் யாவரும் மிகச் செப்பமாகக் கடைப்பிடித்து வருகின்றனர். எவ்வாறெனக் காண்பதற்கு ஓரிரு எடுத்துக்காட்டுக்களை நோக்கலாம்.

உலகில் இன்று எல்லாத் துறைகளிலும் முன்னேற்றங் கண்டுள்ள சப்பானியரிடம் Christ என்ற ஆங்கிலச் சொல்லை ஒலிமாறாது அவ்வாறே ஒலிக்குமாறு கூறினால், அவர்கள் நகைப்பார்கள். இச் சொல்லை அவர்கள் தம் மொழியில் 'கிறிசெத்து' என்றே ஒலிப்பார்கள். சீனர்களோ தம் மொழிக்கு ஏற்ப 'கிறிசெது' என்பர். தம் மொழியில் அவ் வொலி இல்லை என்பதற்காக அதனைப் பெயர்த்துத் தம் மொழி யில் வைத்துக்கொள்ள அவர்கள் ஒருநாளும் ஒப்புவதில்லை.

இதைவிட, ஆங்கில மொழியிலும், பிரெஞ்சு மொழியிலும், செர்மன் மொழியிலும் வரிவடிவங்கள் பெரும்பாலும் ஒத்துள்ளன. ஆயினும் அவ்வம் மொழிச்சொல் பிறமொழியில் ஆளப்படும்போது ஒலி வேறுபாட்டுடன்தான் ஆளப்படு கின்றது. வரிவடிவ ஒற்றுமை இருந்துங்கூட ஒவ்வொரு

மொழியின் ஒலி நுட்பத்திற்கு ஏற்ப ஒலியைத் திரித்தே பயன்படுத்துகின்றனர்.

இதுபோல், பல மொழிகளினின்றும் எடுத்துக்காட்டுக்கள் கூறலாம். எனின் இது பெரிதும் விரியும் என்றஞ்சி, உலக மொழியான ஆங்கிலத்தை மட்டும் சிறிது நோக்குவோம்.

சொற்குறை உள்ளதால் பிற மொழியிடம் கடன்பெறும் ஆங்கிலம், ஒலிக்குறை தம் மொழியில் இருந்துங்கூட அதைக் கடன் பெறுவதில்லை.[1] தமிழிலுள்ள 'ழ'கரம் ஆங்கிலத்தில் இல்லை என்பதற்காக எவரும் 'Thamiழ்' என ழகர ஒலியைப் புகுத்தி மொழியைச் சிதைப்பதில்லை. அவர்கள் மொழிக்கு ஏற்ப 'டமில்' (Tamil) என்றே ஒலிக்கின்றனர். திருநெல்வேலி என்பதை 'டின்னவெலி' என்றும்; கோயம்புத்தூர் என்பதைக் 'கோயம்பேட்டுர்' என்றுமே தம் மொழியின் ஒலிக் கேற்பத் திரித்து வழங்குவர்.

பிற மொழி ஒலியையும், அதற்குரிய எழுத்தையும் கொணர்ந்து தம் மொழியில் புகுத்தி மொழிக்கேடு புரியும் அழிவழக்கர்களை இங்கன்றி வேறெங்கும் காணமுடியாது. தாயை வருத்திப் பேயும் பூதமும் பிய்த்துத்தின்ன விருந்திடுவோர் தமிழ் நிலத்தில் வாழ்கின்றனர். இத்தகைய பேதையரை எண்ணியே அன்றே வள்ளுவர்,

*'எதிலர் ஆரத் தமர்பசிப்பர் பேதை*
*பெருஞ்செல்வம் உற்றக் கடை'*

எனக் கூறினர்.

'தமிழைச் சிதைப்பதுவே எம் தனிப்பெருங்கடன்' என்ற கொள்கையினர் சிலர். தாம் அறிந்ததற்கு மேல் தமிழில் எதுவுமில்லை என்ற கிணற்றுத் தவளையர் சிலர். மொழிக்கென்று சில நெறிகள், முறைகள், மரபுகள் உள்ளன என்பதை உணரார் சிலர்.

இத்தகையவர்களிடம் தாள்கள், இதழ்கள், பல்வேறு வெளியீடுகள், விளம்பர வாய்ப்புக்கள் என்னும் பல்வகைப்

---

1. ஆங்கிலம் பல குறைபாடுகளை உடைய மொழி என்று, அக்குறைபாடுகளை நீக்கத் தம் பெருஞ்செல்வத்தில் ஒரு பகுதியை அறக்கொடையாக வழங்கினர் அறிஞர் பெர்னாட்சா. ஆயின் ஆங்கில மக்களோ 'ஐரிசு நாட்டவராகிய அவருக்கு ஆங்கில மொழியின் நுட்பம் என்ன தெரியும்' என்று அவர் கூற்றை இகழ்ந்தொதுக்கிவிட்டனர்.

பெருஞ்செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. இதனல் 'மொழி நலம்' என்னும் உற்ருர் பசித்திருக்க, 'மொழிச் சிதைவு' என்னும் பகைவர் பசியாறுகின்றனர்.

இதுபோன்ற பொருந்தாத பல முனைப்புக்களையெல்லாம் தமிழ்மொழி புறந்தள்ளித்தான் வளர்ந்து வருகிறது என்பதை அதன் வரலாற்ருல் அறிகின்ருேம். என்ருலும், இழிவும் விலை போகும் இன்றைய விளம்பர உலகில் 'சிதைவும் சிறப்பிற் குரியது' என்ற நிலை தோன்றக் கூடாதன்ருே?

அதனல், மொழி இயல்புகளையும், இலக்கண நெறிமுறைகளையும் கடைப்பிடிக்காது. சில புத்தகங்களிலும், பிறவற்றிலும் கையாளப்படும் பிற ஒலியெழுத்துக்களை யாவரும் முற்றிலும் பொருட்படுத்தாது நீக்கவேண்டும்.

அதன் தேவையின்மையையும், அதனைப் புகுத்துவதால் விளையும் மொழிச் சிதைவையும், பிற இடர்ப்பாட்டையும் யாவருக்கும் எடுத்துரைத்தல் வேண்டும். தமிழைத் தாயாய்க் கொண்டவர்கள் எல்லாரும் இதில் வேண்டிய அக்கறை கொள்ளத்தக்கவர்களே யாவர்.

---

இக் கட்டுரை எழுத உதவிய கருவி நூல்கள்.

1. மொழிநூல் - டாக்டர். மு. வ.
2. தொல்காப்பிய ஆராய்ச்சி - டாக்டர் சி. இலக்குவனர்.
3. முதல் தாய்மொழி - பாவாணர்.
4. 'தென்மொழி' இதழ்கள் - பெருஞ்சித்திரனர்.

———

## யசுர் வேதம் கற்பிக்க நடுவண் அரசு உதவி

குடந்தையிலுள்ள வேதபாஷ்ய பாடசாலை என்ற பள்ளி யசுர்வேத வகுப்புகளை நடத்த நடுவண் அரசு ரூபாய் நூற்றைம்பத்து மூன்ருயிரத்து தொண்ணூறை மானியமாக வழங்கியுள்ளதாம்!

# செய்திகளும் குறிப்புக்களும்

## டாக்டர் பா. நடராசன் அவர்களின் 67ஆவது பிறந்தநாள் விழா மலர்வெளியீடு

பொருளியல் அறிஞரும், தமிழ் அன்பரும், பல பொருளியல் நூல்களின் ஆசிரியருமான டாக்டர் பா. நடராசன் அவர்களின் 67ஆம் பிறந்தநாளை முன்னிட்டுப் பிறந்தநாள் விழா மலர் வெளியீட்டுவிழா 25-2-78 இல் இஞ்சம்பாக்கம், வி.ஜி. பன்னீர்தாஸ் தங்கக் கடற்கரையில் சிறப்புற நடைபெற்றது. இவ் விழாவிற்குத் தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் தலைமை தாங்கினார்கள். 'மெயில்' நாளிதழின் ஆசிரியர் திரு. வி. பி. வி. இராசன் அவர்கள் நினைவு மலரை வெளியிட்டார்கள். திரு. பி. கஸ்தூரி பிள்ளை அவர்கள் (விழாக்குழுத் தலைவர்) முன்னாள் நடுவர் திரு. எஸ். மகராசன், டாக்டர் பி. வி. இராசகுமார், திரு எஸ். ஏ. ரஹீம் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். டாக்டர் நடராசன் அவர்கள் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து பொருளியல் துறைக்குப் பணியாற்ற எல்லாம்வல்ல இறைவன் அருள்புரிவாராக.

## மூன்றாவது உலகப் புத்தகக் காட்சி

கடந்த 11-2-78 இல் புது தில்லியில் மூன்றாவது உலக புத்தகக் காட்சி துவங்கிற்று. குடியரசின் துணைத் தலைவர் பி. டி. ஜாட்டி அவர்கள் காட்சியினைத் துவக்கி வைத்துப் புத்தகங்களால் மக்களிடையே அறிவு வளர்ச்சி ஏற்படும் வாய்ப்புகள் பற்றியும் புத்தக வெளியீட்டுப் பணியின் இன்றியமையாமை பற்றியும் உரையாற்றினர். இப் புத்தகக் கண்காட்சியில் 26 நாடுகள் பங்குகொண்டன. இரண்டு நூறாயிரம் தலைப்புக்களில் புத்தகங்கள் இடம்பெற்றன. இக் காட்சியில் இந்தியாவின் பங்கு குறிப்பிடத் தக்கது. பல்வேறு மாநிலங்களில் வெளியிடப்பட்ட பல்வேறு மொழி நூல்கள் இடம் பெற்றன. 1976 சனவரி முதல் 1977 நவம்பர் திங்கள் முடிய வெளியிடப்பெற்ற 5000 புத்தகங்கள் இடம் பெற்றதிலிருந்து இந்தியாவின் நூல் வெளியீட்டுத் தொழில் வளர்ச்சி நன்கு தெரியவருகிறது. தேசிய புத்தகக் குழு (National Book Trust) இக் காட்சியின் தொடர்பாக பிப்ரவரி 12 முதல் 15 ஆம் நாள் முடிய ஒரு கருத்தரங்கினை நடத்தி, புத்தக வெளியீடு பற்றிய சிக்கல்களை ஆராய்ந்தது என்பதும் குறிப்பிடத் தக்கது.

## முதலாவது சங்கப் புலவர் விழா

காரைக்குடி தமிழ்ச் சங்கத்தின் சார்பில் முதலாவது சங்கப் புலவர் விழா 19—2 78இல் காரைக்குடி மீனாட்சி பெண்கள் உயர்நிலைப் பள்ளியில், விழாவரங்கம், கவியரங்கம், பொழிவரங்கம், என்னும் மூன்று பகுதிகளாகக் காலைமுதல் மாலைவரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவரங்கத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தொடக்கவுரையாற்றினர். டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் சிறப்புரை ஆற்றினர். கவியரங்கம் டாக்டர் இரா. சாரங்கபாணி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 'சங்கத் துறைகள்' என்னும் பொருள் பற்றித் தலைவர் சொற்பொழிவாற்றினர். உடன் போக்கு முதலிய தலைப்புக்களில் தமிழறிஞர் ஐவர் சொற்பொழிவாற்

றினர். பிற்பகலில் பொழிவரங்கம் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சங்கத் தலைவர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் 'தொல்காப்பியர்' என்னும் பொருள் பற்றி உரையாற்றினர். மற்றும் பேராசிரியர் நால்வர் சங்கப் புலவர்கள் பற்றி உரையாற்றினர்.

### வ. உ. சி. நினைவு மண்டபத் திறப்பு விழா

சைவ வேளாளர் பேரவையின் வ. உ. சி. நினைவு மண்டபக் கட்டிட வேலை முடிவுபெற்றதை முன்னிட்டு 12—2—78இல் கோடம்பாக்கம் 2/3, சக்கரையா குடியிருப்பு, முதல் பெருந்தெருவிலுள்ள சைவ வேளாளர் பேரவைக் கட்டிடத்தில் சைவ வேளாளர் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அன்பர்கள் உற்றார் உறவினருடன் வந்து அவ் விழாவினைச் சிறப்பித்தனர்.

### பேராசிரியர் கா. நமச்சிவாயர் நினைவுச் சொற்பொழிவுகள்

சென்னைத் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் சார்பில், புலவர் தேர்வுகளுக்குச் செல்லும் மாணவர்களுக்குரிய முக்கிய பாடப் பகுதிகளுக்கு விளக்கம் தரும் நோக்கத்தோடு சென்னை மாநிலக் கல்லூரியில் 5—3—78 முதல் 17—3—78 முடியப் பேராசிரியர் கா. நமச்சிவாயர் நினைவுச் சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன. 5—3—78இல் இவ் விழாவினைக் கல்விநெறிக்காவலர் உயர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் துவக்கிவைத்தார்கள்.

### மணிவாசகர் நூலகம்-16ஆவது ஆண்டுவிழா

சென்னை மயிலை ஏ. வி. எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் 28—2—78இல் சிதம்பரம் மணிவாசகர் நூலகத்தின் 16ஆவது ஆண்டுவிழா, மாண்புமிகு சுற்றுலாத் துறை அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மாண்புமிகு உள்ளாட்சித் துறை அமைச்சர் கா. காளிமுத்து அவர்கள் இந் நூலகத்தார் பதிப்பித்துள்ள 21 நூல்களை வெளியிட்டார்கள். சிலம்புச் செல்வர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் சிறப்புரை ஆற்றினர்கள். பேராசிரியர் ச. மெய்யப்பன் அவர்கள் நன்றி நவின்றனர்.

### தமிழ்ப் பண்பாடு பற்றிய கருத்தரங்கு

"தமிழ்ப் பெரும் புலவர்களான கம்பர், வள்ளுவர் போன்றவர்கட்கு விழாவெடுத்துச் சிறப்பிக்கும் அதே நேரத்தில், "தமிழ் மொழி, இலக்கியம் ஆகியவற்றின் வளர்ச்சியில் ஒரு புதுமை காண வேண்டும் என்று கருதியே தமிழக அரசு இத் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தினைத் துவக்கியுள்ளது" என்று 26—2—78இல் சென்னையில் அனைத்து நாட்டுத் தமிழ்க் கல்விக் கழகத்தினரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தமிழ்ப் பண்பாடு பற்றிய கருத்தரங்கினைத் துவக்கி வைத்துப் பேசிய தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு சி. அரங்கநாயகம் அவர்கள் குறிப்பிட்டார்கள். இக் கருத்தரங்கிற்குப் பள்ளிக் கல்வி இயக்குநர் டாக்டர் லாரன்ஸ் தலைமை தாங்கினர். நுண்கலைக் கல்வி இயக்குநர் டாக்டர் வி.சி. குழந்தைசாமி அவர்கள் பேசிய போது வேளாண்மைத் துறையிலும் வணிகத் துறையிலும் ஏற்பட

வேண்டிய தமிழ்மொழியின் ஆக்கம் பற்றிக் குறிப்பிட்டார். மற்றும் டாக்டர். தெ. பொ மீனாட்சி சுந்தரனார், டாக்டர். ச. வே சுப்பிர மணியம், பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு ஆகியோர் தமிழ் மொழி, கலை ஆகியவற்றின் வளர்ச்சி குறித்து உரையாற்றினர்.

## செய்தி இதழ்ப் பணியாளர்க்கு உதவி நிதித் திட்டம்

ஒய்வுபெற்ற, நோயுற்ற, வறுமையுற்ற செய்தி இதழ்ப் பணி யாளர்க்கும், போர் போன்ற கடமை யாற்றும்போது உயிர் துறந்த வீரர்களின் குடும்பத்தார்க்கும் உதவி அளிப்பதற்கென 5 நூறாயிரம் ரூபாய் முதலீடு செய்யத் தமிழக அரசு திட்டம் வகுத்திருப்பதாகவும், இதிலிருந்து கிடைக்கும் தொகையும், பணியாளர் செலுத்தும் தொகையும் ஆகிய இரண்டின் வழி ஒரு பணியாளர் திங்க ளொன்றுக்கு 100 முதல் 250 ரூபாய் உதவியாகப் பெறக்கூடும் என 7-3-78 இல் சட்டப்பேரவையில் மாண்புமிகு அமைச்சர் இராம வீரப்பன் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

## உலகத் தமிழ்க் கழகம், நெய்வேலி

உலகத் தமிழ்க் கழகத்தின் நெய்வேலிக் கிளையின் சார்பில் 28, 29—1—78 ஆம் நாள்களில் முறையே திருவள்ளுவர் நாள் விழாவும் பொங்கல் விழாவும், நெய்வேலி நகர்க்கூறு 24 இல் உள்ள கலை யரங்கில் சிறப்புற நடைபெற்றன. திருவள்ளுவர் விழாவிற்குப் புலவர் திரு. தி. நா. அறிவு ஒளி தலைமை தாங்கினர். 'திருக்குறள்' என்னுந் தலைப்பில் பாவலர் எண்மர் பாட்டரங்கம் நிகழ்த்தினர். பொங்கல் விழா திரு. சோ. அப்பூதி, பொ. இ. அவர்கள் தலைமை தாங்க, தென் மொழி ஆசிரியர் பாவலரேறு பெருஞ் சித்திரனார் அவர்கள் சிறப் புரையாற்ற, உலகத் தமிழ்க் கழக குடும்ப மாணுக்கர், மாணுக்கியர் களால் 'கற்பு', 'வீரம்', 'நட்பு' முதலிய நாடகங்கள் நடைபெற விழா இனிது முடிந்தது.

## பேராசிரியர் இராசாக்கண்ணனார் மறைவு

தமிழக அரசு தமிழ் வளர்ச்சித் துறையின் முன்னாள் இயக்கு நரும், பல தமிழ் நூல்களின் ஆசிரியரும், கழக நூலாசிரியருள் ஒரு வரும் கழக ஆட்சியாளரிடமும் கழகத்திடமும் பற்றுள்ளவருமான பேராசிரியர் முத்து இராசாக்கண்ணனார் அவர்கள் கடந்த 22—2—78 புதன்கிழமை இரவு தமது 64ஆம் அகவையில் மார் படைப்பால் காலமானார்கள் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம்.

திரு. இராசாக்கண்ணனார் அவர்கள் திருப்பாதிரிப் புலியூர் தவத்திரு ஞானியார் அடிகளின் மாணுக்கராவர். கடலூரில் தமிழா சிரியராகப் பணியாற்றத் துவங்கிய இவர் நுண்மாண் நுழைபுல மிக்கவர். பேச்சாற்றல் எழுத்தாற்றல்கள் வாய்க்கப் பெற்றவர். வித்துவான் தேர்வுபெற்ற இவர், பின்னர் பி.ஓ.எல்., எம் ஏ. என்ற தகுதிகளையும் பெற்றார். சென்னை அரசினர் கலைக் கல்லூரியின் முதல்வராகவும், மலேசியப் பல்கலைக் கழகத்தில் இந்தியப் பகுதியின் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். இவருக்கு மனைவியும் ஆண் மக்கள் மூவரும் பெண்மக்கள் இருவரும் உளர். மறைந்த இப் பேராசிரியரின் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். பேராசிரியரின் இன்னுயிர் இறையடியில் இன்புறுவதாக.

## இராசாக்கண்ணனர் மறைவுக்கு இரங்கல்

### [வெண்பாவூர் புலவர் பொ. திருஞானம்.]

இராசாவாய்த் தமிழதனைக் கண்ணுய்க் கொண்டே
　இராப்பகலாய் ஆராய்ச்சி நூல்கள் செய்தே
பேராசை கொண்டேதான் தொண்டு செய்தீர்!
　பெருந்துயரை அளித்துவிட்டு மறைந்து சென்றீர்!
ஓராசை முதல்வராய் இருந்து வந்தீர்!
　ஒப்பரிய சாதனைகள் புரிந்து வந்தீர்!
வேருசை இல்லையினி என்றுல் கூட
　வேதனையை எவ்வாறு மறக்க ஒண்ணும்?

### தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்கம் – திங்கள் வழிபாட்டு வெள்ளிவிழா

சென்னை மேற்த மாம்பலத்தில் சைதை தேவாரம் த. நடராசன் அவர்கள் அருமுயற்சியால் கடந்த இரண்டாண்டுகளாக நடைபெற்றுவரும் தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்கத்தின் திங்கள் வழிபாட்டின் வெள்ளிவிழா 12-2-78 இல் அனகாபுத்தூர் அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலில், திருநெல்வேலி சுந்தர ஓதுவார் மூர்த்தி பந்தலில் தமிழக ஆளுநர் மாண்பமை பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது. தமிழக சட்டமன்றப் பேரவைத் தலைவர் மாண்புமிகு முனு ஆதி அவர்கள் தலைமை தாங்கி வெள்ளிவிழா மலரை வெளியிட்டார்கள். தமிழ் அறிஞர்களும், சைவ மெய்யன்பர்களும் வந்திருந்து விழாவினைச் சிறப்பித்தனர்.

### "மணிமேகலை" தொடர் சொற்பொழிவு

சென்னை ஒப். எம். சி. ஏ. பட்டிமன்றத்தில் 3—1—78 இல் தொடங்கி "மணிமேகலை" என்னும் பொருள் பற்றி ஒவ்வொரு செவ்வாய்க் கிழமையும் உயர்திரு. சிலம்பொலி செல்லப்பன் எம் ஏ., பி.டி. அவர்கள் தொடர் சொற்பொழிவாற்றி வருகிறுர்கள். 7-3-78 இல் "சிறைச்சாலையில் மணிமேகலை" என்னும் சொற்பொழிவுக்கு கவிஞர் ஈரோடு தமிழன்பன், எம்.ஏ. தலைமை தாங்கினர். பட்டிமன்றத்துக்கிட்டிடும் பயன்பெற ஒப். எம். சி. ஏ வில் உறுப்பினராகுமாறு செயலாளர் திரு. கெ. பக்தவத்சலம் அவர்கள் தமிழ் அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறுர்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-௬, ௯௧எ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. கழக ஆட்சியாளர் அவர்கள், மார்சுச். 78 | 100-00 |
| ,, கழக மேலாளர் ,, | 5-00 |
| திரு பூ. சொல் விளங்கும் பெருமாள் அவர்கள், மதுரை | 6-00 |
| திரு. நூலகர் அவர்கள், அரசினர் கலைக்கல்லூரி, திருப்பூர் | 5-00 |

# மதிப்புரை

## மொழியுரிமை

[ஆசிரியர்: கு. வெ. கி. ஆசான்; வெளியீடு: பூங்குன்றன் பதிப்பகம், 6, திருவேங்கடம் தெரு, கோவை-641002. விலை: ரூ. 2-00]

'உரிமைக்குரல்' முதல் 'இறுதிவரை எழுச்சி கொள்வோம்' ஈறாகப் பதினேழு தலைப்புக்களில் மொழிச்சிக்கலைப் பற்றி விரிவாக ஆராய்ந்து தெளிவுறுத்தியுள்ளார் ஆசிரியர். ஆட்சி மொழிச் சட்டத்தின் விளைவாக இந்தி வல்லாண்மை ஏற்படும் என்பதும் இந்திய மொழிகள் அனைத்திற்கும் சமநிலை என்னும் கொள்கையும் விளக்கப்பட்டுள்ளன. மொழிச் சிக்கலுக்குத் தீர்வு காணப் பயன்படுவது இந் நூல்.

## தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்கத் திங்கள் வழிபாட்டு வெள்ளி விழா மலர்

[கிடைக்குமிடம்: 22, டி. எல். கிருட்டப்ப நாயகர் தெரு, சென்னை-33. விலை: ரூ. 1-00.]

தேவாரத் திருமுறைகளைப் பரப்பும் பொருட்டுத் தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்கத்தார் கடந்த ஈராண்டுகளாகத் திங்கள் தோறும் செய்துவரும் வழிபாட்டு வெள்ளிவிழா மலர் சங்கச் செய்திகள், திருமுறைப் பெருமைகள் முதலியவற்றைத் தாங்கிச் சிறப்புற அமைந்துள்ளது. அம்பலவாணர், நால்வர் திருவுருவங்கள் அட்டையில் பொலிவுற விளங்குகின்றன.

## குமாரன் ஆசான்

[ஆசிரியர்: கு. வெ. கிருட்டிணசாமி. வெளியீடு: பூங்குன்றன் பதிப்பகம், 6, திருவேங்கடம் தெரு, கோவை-641002. விலை: ரூ. 7-50.]

சீர்திருத்தச் "செம்மல் மலையாள மாகவிஞர் குமாரன் ஆசான்" என்னும் இந் நூல் மலையாள மொழிக்கு வளஞ்சேர்த்த பெரும் பாவலராகிய குமாரன் ஆசான் அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், வாழ்க்கைச் சிறப்பையும், பாநலத்தையும் விளக்குகின்றது. ஆசிரியரின் கட்டுரை வன்மை பாராட்டற்பாலது.

## தேசாதிபதி 24 மனையார் கதைகள்

[ஆசிரியர்: கி. மா. பத்தவச்சலன். வெளியீடு: சந்திரோதயம், 8/11-ஆ, சிரங்கம்மாள் தெரு, சென்னை-600021. விலை: ரூ. 5-00.]

இந் நூல் தெலுங்குச் செட்டியார் சாதிக் கதையாகும். சுவைபட வரையப்பட்டுள்ளது. தெலுங்குச் செட்டியார் 7 ஆவது மாநாட்டில் வெளியிடப்பட்டதாகும். அச் சாதியார்க்கு இது பயன்படும். மற்றவர்களும் படித்துக் கதையைத் தெரிந்துகொள்ளலாம்.

---

*திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.*

*ஆசிரியர்: வ. சுப்பையா.*

'செந்தமிழ்ச் செல்வி' பற்றிய உரிமை விளக்கம்–1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி

---

1. வெளியிடும் இடம் : 1/140, பிரகாசம்சாலை, சென்னை 1
2. வெளியீட்டு முறை : திங்களிதழ்
3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 2/140, பிரகாசம்சாலை, சென்னை-1.
4. வெளியீட்டாளர் பெயர் : திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிட்டெட்,
   இனம் : இந்தியர்
   முகவரி : 1/140, பிரகாசம்சாலை, சென்னை-1
5. ஆசிரியர் பெயர் : திரு. வ. சுப்பையாபிள்ளை
   இனம் : இந்தியர்
   முகவரி : 1/140, பிரகாசம்சாலை, சென்னை-1
6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பங்குடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும் :

1. திரு. T. S. இராமலிங்கம் பிள்ளை, M. A., B. L.
   ஓய்வு பெற்ற சட்டத்துறைச் செயலாளர்,
   7, வேடி தேசிகாச்சாரி சாலை, ஆழ்வார்பேட்டை,
   மயிலாப்பூர், சென்னை-4.
2. திரு. வ. சுப்பையா பிள்ளை
   6, பவழக்காரத் தெரு, சென்னை-1.
3. திருமதி சு. மங்கையர்க்கரசி
   6, பவழக்காரத் தெரு, சென்னை-1.
4. திரு. R. M. S. கோபாலகிருஷ்ண பிள்ளை
   வணிகர், சாத்தான்குளம்,
   (திருநெல்வேலி மாவட்டம்)
5. திரு M. K. சிவகாமிநாத பிள்ளை
   நான்காவது மாடி, புரோச் கட்டிடம்
   பிரின்செஸ் தெரு, பம்பாய்-2.
6. திரு. N. S. சுந்தரம், பார்-அட்-லா,
   134, தெற்கு இராச வீதி, தூத்துக்குடி.
7. திரு. மு காசிவிசுவநாதன் செட்டியார்
   வங்கியார், பாகனேரி, (இராமநாதபுரம் மாவட்டம்)

8 திருமதி கா. லட்சுமி ஆச்சி
(திரு. காசிவிசுவநாதன் செட்டியார் மனைவி)
பாகனேரி.

9. திரு. பெரி. அழ. மு. நா. நாராயணன் செட்டியார்
உரிமையாளர், பாரி அச்சகம், 127, பிரகாசம் சாலை, சென்னை-1

10. திரு. மு. ஆறுமுகம்
15. பெருமாள் வடக்கு மாடத்தெரு,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2.

11. திருமதி க. வடிவழகி
(திரு. இரா. கலியாணசுந்தரம் மனைவி)
3, மேட்டுத் தெரு, சென்னை-1.

12. திருமதி. மு. வயிரமணி
(திரு. இரா. முத்துக்குமாரசாமி மனைவி)
3, மேட்டுத் தெரு, சென்னை-1.

13. திருமதி பழ. மீனாட்சி ஆச்சி
(திரு. S. M. பழனியப்ப செட்டியார் மனைவி)
11, ரட்லண்ட் கேட், 2-வது தெரு,
சென்னை-6.

14. திரு. S. Ct. சிதம்பரம் செட்டியார்
162, அவினாசிசாலை, கோயமுத்தூர்-1.

15. திரு. A. Kn. அருணாசலம்
(திரு. கண்ணப்பசெட்டியார்புதல்வர்நாயனார்குளத் தெரு
நாட்டரசன் கோட்டை, (இராமநாதபுரம் மாவட்டம்)

16. திரு. T. S. ஜம்புலிங்கம் செட்டியார்
திருப்பூர் இல்லம், கோயமுத்தூர்.

17. திரு. Rm. K. Rm. இராமசாமி செட்டியார், வங்கியார்,
திட்டை, (தஞ்சை மாவட்டம்)

18. திரு. இரா. கலியாணசுந்தரம், பி. எஸ்ஸி.
3, மேட்டுத்தெரு, சென்னை-1.

19. திரு. இரா, முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி லிப்
3, மேட்டுத்தெரு, சென்னை-1.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் எனது முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என வ. சுப்பையா பிள்ளையாகிய நான் உறுதியளிக்கிறேன்.

10—3—1978

(ஒப்பம்) வ. சுப்பையா பிள்ளை
பதிப்பாளர்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தமிழும் தத்துவமும்—டாக்டர். சோ. ந. கந்தசாமி | 12 | 00 |
| பிளினி—வி. எஸ். வி. இராகவன் | 20 | 00 |
| பெரிபுளூஸ் ,, | 16 | 00 |
| அரும்பு—எம். வி. வெங்கட்ராமன் | 18 | 00 |
| ஒரு பெண் போராடுகிருள் ,, | 20 | 00 |
| தமிழ் கற்பித்தல்—டாக்டர் எம். எஸ். திருமலை | 15 | 00 |
| நந்திவர்மன்—கோ. வி. மணிசேகரன் | 16 | 00 |
| சிறப்புமிக்க சிவாலயங்கள் —புலவர் சி. முத்துப் பிள்ளை | 6 | 00 |
| கலிங்க நாயகி—புரவலன் | 10 | 00 |
| இலக்கியச் சிந்தனைகள்—சிலம்பொலி செல்லப்பன் | 5 | 00 |
| காவியமனைவி—கோ. வி. மணிசேகரன் | 4 | 50 |
| சத்துணவுத் திட்டம்—வைத்தியமணி இரத்தினசண்முகனுர் | 5 | 00 |
| மனநோயும் நீக்கும் வழியும் ,, | 5 | 50 |
| 1001 இரவுகள் (1, 2 பகுதிகள்) —பரதன் | 9 | 80 |
| கண்ணீர் காவியமாகிறது—துருப்பூர் குப்புசாமி | 7 | 00 |
| அமெரிக்காவில் அண்ணு, எம்.ஜி.ஆர். —டாக்டர் எம். எஸ் உதயமூர்த்தி | 4 | 50 |
| சிந்தனைக்குச் சில கதைகள்—ந. சி. தெய்வசிகாமணி | 2 | 50 |
| நீதிக்குச் சில கதைகள் ,, | 2 | 50 |
| நெஞ்சில் பூத்த மலர்—நா. ரா. பண்டரிநாதன் | 8 | 50 |
| கல்வெட்டுக்களில் அரசியல் சமயம் சமுதாயம் —டாக்டர் மா. இராசமாணிக்கனுர் | 5 | 00 |
| திருக்கோயில் கல்வெட்டுக்கள் ,, | 10 | 00 |
| கல்லும் சொல்லும்—டாக்டர் இரா. நாகசாமி | 10 | 50 |
| தொல்லியல் ஆய்வுகள்—டாக்டர் கே. வி. ராமன் | 8 | 00 |
| கல்வெட்டில் தேவார மூவர் —பேராசிரியர் கா. ம. வேங்கடராமையா | 8 | 00 |
| இலெமூரியா முதல் அரப்பா வரை —பன்மொழிப் புலவர் இரா. மதிவாணன் | 9 | 00 |
| குறள் அறிமுகம் ,, | 8 | 50 |
| பிராகிருத இலக்கிய இன்பம் ,, | 8 | 50 |
| இலங்கையில் தமிழ்ப்பண்பாடு —பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு | 8 | 00 |
| வரலாற்றுச் சுடர் ,, | 8 | 00 |

பதிவு எண் : M. 4899

# கழகப் புதிய வெளியீடுகள்

## சுந்தரர் வரலாற்றுராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்

ஆசிரியர் : பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி எம். ஏ.

இந்நூல் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் பெயரில் கழகம் அமைத்துள்ள திருமுறைப் பரிசின் மூன்றாவது வெளியீடாகும். இதன்கண் சுந்தரமூர்த்தி நாயனாரின் வரலாறு அகப்புறச் சான்றுகளுடன் விளக்கமாக எழுதப்பெற்றிருப்பதுடன் அவர்தம் தேவார அருட்பாடல்கள் பற்றிய திறனாய்வும் சேர்க்கப்பட்டுள்ளது. வரலாற்றுராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படத்தக்க நூல். நூலகங்களிலெல்லாம் இருக்கவேண்டிய பயனுள்ள நூல். அழகிய பதிப்பு—325 பக்கங்கள். ரூ 12 50

## வானொலியில் வள்ளுவர் ஓவியங்கள்

(கல்வி உரையாடல் நாடகங்கள்)

ஆசிரியர்: வித்துவான் கோ. வே. பெருமாள், எம்.ஏ., பி.டி.

இதில் 'செய்ந்நன்றி அறிதல்' 'அடக்கம் உடைமை' 'அறன் வலியுறுத்தல்' 'தெரிந்து தெளிதல்' என்னும் நான்கு தலைப்புக்களில் வள்ளுவரின் குறளோவியங்கள் பள்ளி மாணவர்க்கேற்ப உரையாடல் நாடகங்களாக எழுதப்பட்டுள்ளன. இவை திருச்சி வானொலி நிலையத்தினின்று ஒலி பரப்பப்பட்டவை. இவ் உரையாடல் நாடகங்கள் மாணவர்கள் படித்தற்கும் நடித்தற்கும் ஏற்றவை. ரூ 3 00

## சிவப்பதிகள் வரலாறு—(வழி விளக்கங்களுடன்)

தேவாரப் பாடல்பெற்ற சிவப்பதிகளுக்குச் சென்று இறைவனை வழிபடவும், சுற்றுலாவாகச் சென்று சிவப்பதிகளின் மாண்புகளை அறியவும், சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது இந்நூல். சிவப்பதிகளுக்கு அண்மையில் உள்ள புகைவண்டி நிலையங்கள், இருப்புப்பாதை எண் முதலியன பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்டுள்ளன. முக்கியமான 22 திருக்கோயில்களின் படங்கள் இணைக்கப்பட்டுள்ளன. சுற்றுலாச் செல்வோர் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டிய இன்றியமையாத நூல். அழகிய பதிப்பு. ரூ. 6 75

இருப்புப்பாதை விளக்கப் படங்களைக் கொண்ட தனி ஏட்டுடன் விலை ரூ. 7 50

விளக்கப்படத் தனி ஏட்டின் விலை ரூ. 1 00

## மதுரை மீனாட்சியம்மை சந்தத்திருவடி மாலையும் திருவடிப் பத்தும்— குறிப்புரையுடன்

ஆசிரியர் : சோழவந்தான் அரசஞ்சண்முகனார்

அரசஞ் சண்முகனார் அவர்கள் மதுரை அங்கயற்கண்ணி அம்மைமீது பாடிய 32 சந்தப் பாடல்களைக் கொண்டது இந்நூல். பாடல்கள் திருப்புகழ்ச் சந்தப் பாடல்களைப் போல் சுவைபட எழுதப்பட்டுள்ளன. இப் புலவர் பெருமான் இளமைப் போதில் இயற்றிய 'திருவடிப்பத்து' என்னும் 10 அருட்பாடல்கள் இந் நூலின் பின்னிணைப்பாகச் சேர்க்கப்பட்டுள்ளன. ரூ. 3 75

அப்பர் அச்சகம், சென்னை-1.